உ

கணபதிதுணை.

சிவமயம்.

# சிங்கப்பூர்ப்
# பிரபந்தத்திரட்டு.



இது

ஸ்ரீவன்றொண்டரவர்கள்

மாணாக்கருளொருவராகிய

காரைக்குடி

ராம. கு. மெ. மெய்யப்பசெட்டியாரால்

இயற்றப்பெற்று,

நாச்சியார்புரம்

பெரியகருப்பச்செட்டியார் குமாரர்

மூத்தையசெட்டியார்

கேட்டுக்கொண்டபடி

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்

அச்சிடப்பெற்றது.

---

விகாரி௵ மார்கழி௴.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.



ஸ்ரீவன்றொண்டரவர்கள்
மாணுக்கருள் ஒருவராகிய
காரைக்குடி
ராம. கு. ராம. சொக்கலிங்கச்செட்டியார்
இயற்றியது.

---

பூங்கமலத் தனம்பொலியும் பூங்கமலத் தடம்புடைசூழ் பொற்பு மேவும், பாங்கமலத் தடஞ்சிங்கைப் பாங்கமலத் தனிவேற்கைப் பரன்றாட் கஞ்சத், தேங்கமலர் மிசைப்புனை ந்தான் றேங்கமல மென்றெவருஞ் சிரங்கொண் டாடத், தூங் கமலம் பாடுநர்க்குத் தூங்கமலன் பின்றமிழ்ப்பைக் தொடைப்பா மாலே. (க)

அப்பனுவ லெப்பெயர்த்திங் கப்பெரிய னெப்பெயரோ ணறைகென் பீரோ, லொப்பிலியா யண்டமெலா மொருங்கரு ளும் பெருங்கருணே யொளிர்வே லோனே, யப்பனேயெவ் வுயிர்க்கருளு மங்கலார் பிள்ளேயெனு மமைதிக் கேற்பச், செப்பினனிப் பெருங்கவியைத் திகழ்பிள்ளேக் கவியெனநீர் தெளிக மாதோ. (உ)

தடங்கையினி லுவர்க்கடலா சமித்தகுறு முனியுவர்ப் புத் தணப்ப விப்பா, ரிடங்கொளவந் தெல்லேயின்முத் தமிழ்க்கடலா சமித்தினிதிங் கிருக்கின் றானென், றடங்குமனப் பேறிஞ ராதரவக் கடலெளிதி னருந்தி யாங்கே, யுடங்கி

னிய சிவமணங்கொண் டுறுசுவையின் பாவமுத முதவு மே லோன். (௩)

என்னுரிய நண்பனுமா யின்றெண்டர் போற்றியல்வன் றெண்ட னெம்மான், றன்னருள்வாய்ப் பொருளமுதந் தனை நிறைப்ப மனக்கலந்தூய் தாக்கி யாங்குப், பன்னுறுநூற் பொருட்கோண்முற் பயிற்றுகுர வனுமாகிப் பாடமென்றே, டின்னருள்கூ டுறக்கேட்டே யெனதுசக பாடியுமா யெனக்கு வாய்த்தோன். (௪)

அகத்தாசான் றிடாதருளா லகற்றுசான் வன்றெண்ட வாசான் றன்பான், மிகுத்தோது மாணவருண் மேதகையா னேதகுள மீத மைத்தே, சகத்தாமால் விடையானைச் சடை யானை யிடையாமற் றாழ்ந்து நாளும், பகுத்தோது பராயண ன்பார் பராயணநூல் விராயணவப் பயிற்று மேலோன். (௫)

அருக்காரா நசைமுனிவற் றணிபரமன் றணிவிலரு ளா யவின்பப், பெருக்காரா மணிக்கொள்கலன் பெருவானின் மணிமாடம் பிரசப் பூங்கான், செருக்காரா முதற்பலவுஞ் சேணகர்கா விரண்டெனுமா செறிந்து மல்குந், திருக்காரா நகரதனிற் றிகழ்தருமெய் யப்பகவிச் சிம்புண் மாதோ. (௬)

வேறு.

இத்தகுபிள் ளைத்தமிழ்சண் முகமாலை பதிக மிலங்கு நவ மணிமாலை கயற்கணிசீர் மாலை, யத்தனம ரிரட்டைமணி மாலையனு கூல னருண்மாலை பதிகமொருங் கெட்டெனச்சேர்த் தமல,முத்தியருள் புத்தமுதத் திரட்டாகச் சிவ்வை முதற் பிரபந் தத்திரட்டென் றிதப்பெயரிட் டளித்தான், புத்தி நிறை மெய்த்திகழ்பே ரத்தகையோன்றுலி புலாகமே லுண ர்த்தலினுன் புகல்வதெவன் புலவீர்.

உ

சிவமயம்.

சிங்கப்பூர்

# சித்திவிநாயகர் நவமணிமாலை.



காப்பு.

எத்தேவர்க் கேவர்சொலு மெக்கவிக்குங் காப்பாகு
மெய்த்தேவாஞ் சித்தி விநாயகனை - முத்தேவர்
நாயகனைப் பாடு நவமணிமா லைக்கவன்பொற்
றாயமலர்த் தாளே துணை.

நூல்.

பொன்னறுங் கடுக்கைப் புரிசடைக் கருணைப் புண்ணி
யா புவனமீன் றெடுத்த, பொலங்கொடி யுமையு மவட்கன
ணியமாம் புராந்தக முதல்வனும் வழிபட் - டுன்னிய கருமங்
கைவரப் பெற்ற துண்மைநூ லோதுத லுணர்ந்து, முனர்
விலி யாகி யெந்தையை யிறைஞ்சா தொழிந்தனன் கழிந்த
நா ளெல்லாங் - கன்னலும் பாகுங் கண்டுமுக் கனியுங் கனி
சுவைப் பண்ணியம் பலவுங், காதலித் தடியர் படைப்பவுண்
டெண்ணுங் கருமமெய் துறப்புரி பெரியோய் - தென்னலம்
பரவு சிங்கையம் பதியிற் சிறந்தினி தாகவீற் றிருக்குஞ்,
சித்தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயகமணியே.

என்மய மிழந்து தன்மய மாகி யான்கிடந் துழக்கவா வரித்த, வெறும்மலக் குறும்பு நின்னரு ணோக்கி னிளைத்த டங் குறவிருட் செறிவாற் - றன்மய மிழந்த விழியொளிக் கிரவி தன்னொளி கலக்கவெப் பொருளுந், தயங்குறக் காணு மாறெனை யடிக டமையுணர்ந் துய்யுநா ளுளதோ - பொன் மயப் படிவ புராதன பராவும் புந்தியுள் விழைந்தெள் ளமு தே, போக்கொடு வரவு நினைப்பொடு மறப்பும் புறம்பொடு முள்ளென விகந்த - சின்மயப் பொருளே சிங்கையம் பதியிற் சிறந்தினி தரசுவீற் றிருக்குஞ், சித்தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயக மணியே. (உ)

விரியகம் பிரம மெனநினைந் தறிவை விழவிடை யிறைத்தநீ ராக்கி, வேட்டவை யளித்து மெனக்கொடிநிறுவு மிது லோ யகன்மய லகற்றப் - பரிவொடு பனவப் பிரமசாரிய னுப் படர்ந்தவன் சிவனுந் தன்மை, பண்புற விளக்கி மெய் யருண் ஞானம் பகர்ந்திடு கருணையான் மறவேன் - கரிமுகத் தழகு மொருபிறை மருப்புங் காமரு மிருமுறச் செவியுங், கவினருள் கொழிக்குஞ் சிறியகட் பொலிவுங் கனகவெற் பனையநாற் புயமுந் - திருவழ கெறிப்பச் சிங்கையம் பதியிற் சிறந்தினி தரசுவீற் றிருக்குஞ், சித்தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயக மணியே. (ந)

ஏடணை மூன்றிற் படுதுயர்க் கடலி னிருவினைக் கொடுஞ்சுழி யிடைப்பட், டெண்ணரு மோகக் கொடுந்திரை யலைப்பவேறிய மடமைவெஞ் சுறவு - பாடறக் கவ்வி யடர்த்திடத்

தமியேன் பற்றில னுயல மருதல், பகருமுற் றறிவை யுடை யவெர் தாய்க்குப் பகர்வதென் பரிந்தருள் புரிவாய் - கோ டொரு கரத்தின் முறித்தெடுத் திறவாக் குஞ்சர முகனுயிர் கவர்ந்து, குறைந்தவா னவர்க்கு நிறைந்தவா னளித்த குரி சிலே கரிசிலா வளஞ்சேர் - சேடர்கள் பரவுஞ் சிங்கையம் பதியிற் சிறந்தினி தரசுவீற் றிருக்குஞ், சித்தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயக மணியே. (௪)

பதிபசு பாச மூன்றுமுள் பொருளாப் பகர்மறை யாக மத் துண்மை, பற்றில ராகிப் பற்பல ரபாவம் பகர்ந்துமுப் பொருட்குமே லொன்றே - துதிபெறு பிரமங் கீதுவலான் மாயை தோற்றுறும் பவஞ்சமா யென்பர், சுத்தமாம் பொ ருளை யசுத்தமா வரித்தல் தொன்மறைக் கேற்றதோ வுரை யாய் - முதுபழம் பொருட்கு முதுபழம் பொருளே மும்மு தற் கடவுள ரிறைஞ்சு, மூலமே நடுவே முடிந்திடு மொளி யே முத்தர்வீழ் முத்தியின் வைப்பே - சிதைவில்சீர் பெருகு ஞ் சிங்கையம் பதியிற் சிறந்தினி தரசுவீற் றிருக்குஞ், சித் தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயக மணியே. ()

மண்டலை யளித்துத் தன்னொரு குடைக்கீழ் மன்னுயிர் ப் பயிரொலாந் தழைப்ப, மாறடு கொற்றத் திகிரியொன் றுரு ட்டு மன்னவ ராக்கமுஞ் சுவண - வெண்டலை யுலகு மைந்தரு நீழ லிருக்கையுஞ் சுதன்மையி லரியே, றேந்திய தவிசு மு டையகோன் பதமு மெந்தைநின் றெண்டர்கட் கொடையே - கண்டலின் முகையைப் பருகுவான் றம்மைக் காதலித் திரு த்தவெங் குருகாக், கண்ணுபு தகட்டுப் பகட்டுவால் வாளை

கற்பகங் கழுத்திற வெடிபோந் - தெண்டிசை யுடுத்த சிங்கை யம் பதியிற் சிறந்தினி தரசுவீற் றிருக்குஞ், சித்தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயக மணியே. (சு)

ஆதரம் பெருக வுளங்கசிந் திருகண் ணருவிபாய்ந் தென்புநெக் குருக, வரியநான் மறைநா லேமெழனுஞ் சிறப்பி னாகம நிறுவிய வழிநின் - றேதமொன் றின்றி நின்பரி புரத்தா ளிதயதா மரைமிசை யுறவைத், தென்று மன்புருவா நின்றமெய் யடிய ரிணையில்குற் றேவலென் றடைவேன்-பூதரச் சிலைகொள் புனிதநா யகர்க்கும் புவியெலாம் பூத்தபொற் கொடிக்கும், பொற்புறு குமா ரூகியு மவர்தம் பூச்சிய நுயமெய்ப் பொருளே - சிதரன் விரும்பு சிங்கையம் பதியிற் சிறந்தினி தரசுவீற் றிருக்குஞ், சித்தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயக மணியே. (எ)

கும்பமோ கனகக் குன்றமோ மாரன் குருமணி மகுடமோ விளைஞர், குறித்திடு மிதய விறற்பொருண் முழுதுங் கொள்ளைகொண் டிடவயன் வகுத்து-வம்பிடைப் பொதிந்த மந்திரச் செப்போ மணிக்குய மெனப்புகழ்ந் தறிவின், மடந்தையர்க் குருகுந் தமியனே னடிகண் மலரடிக் குருகுநா ளுளதோ-கம்பமால் கரியின் முழக்கமு மதநீர்க் கலுழிபாய் சும்மையு மிரதக், கறங்குபே ரொலியும் யாத்துமுந் துறச்செல் கந்துகத் துழனியு மொழியாச் - செம்பொனீண் மறுகிற் சிங்கையம் பதியிற் சிறந்தினி தரசுவீற் றிருக்குஞ், சித்தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயக மணியே. ()

மூவரும் பரவி முத்தொழி லியற்ற முதம்பொழி விழிக்கடை யளிக்கு, முழுமுதற் கடவு ணீயெனக்கருதி முறைபிறழ் நடையுடைப் பொல்லாப்:- பாவமே திரண்ட படிவுடைத் தமியேன் பற்றென வடைந்தன னடிகள், பக்குவங் குறியா தாண்டிடி னலது பவமொழிந் துய்யுமா றுணரேன் - தாவிலா ஞானத் தமனியப் பொருப்பே தண்ணளி நிறைந்தவாரிதியே, தருக்கற வமைந்த திருக்கிளர் மதியிற் சந்ததமொளிருமா மணியே - தேவர்க டேவே சிங்கையம் பதியிற் சிறந்தினி தரசுவீற் றிருக்குஞ், சித்தர்க ளிதயப் புத்தல ரகலாச் சித்திமா விநாயக மணியே. (கூ)

சித்திவிநாயகர் நவமணிமாலை முற்றிற்று.

---

உ

சிவமயம்

# சுப்பிரமணியசுவாமிபிள்ளைத்தமிழ்.



காப்பு.

ஐயா னனக்கடவு ளாறுபட் டெழுதிரை யலைப்பவத னூடலை படு, மம்புலிக் குழவிதனை நோக்கிநங் கோட்டின் முன் னற்றகுறை யிஃதா மெனு - வெய்யாத வுவகையொடு பற்றப் புழைக்கர மெடுத்துமதி கண்டு வெருவி, யீண்டுமெஞ் சாதுநம் பகையரவு தொடருமா றீதிறும் பூதா மெனு - நை யா நெடுஞ்சடை கரப்பவொரு கோட்டுருவை நதியிடைக் கண்டஃ தெனு, நாரமுழு தும்முழக் குங்குஞ் சரக்கன்றி னுண்மலர்க ளஞ்சலிப் பாம் - பொய்யாத நான்மறைச் சென் னியின்மெய் யாகமப் போதமல ரணையி லன்பர், புந்தியிற் சிங்கைப் புரத்திலமர் சண்முகப் புனிதனற் கவிதழை யவே.

நூல்.

## காப்புப்பருவம்.



திருமால்.

வண்டுபடு தண்டுழாய்ப் படலையாற் கரசரண வதனநய னத்துந்தி யான், மன்னுங் கவுத்துவத் திருமணியி னூற்றிரு மடந்தையுறு மாண்பா னெடுங் - தண்டுவாழ் சிலையினுற் போ ராழி யுறுதலாற் றண்மதியின் வாலி தாகுஞ், சங்கமங் குறு

தலாற் பொங்கொளி செறிந்துநிறை தருகின்ற சைவ லஞ் சேர்ங் - தெண்டகைய முண்டகம் பூத்துமணி கொண்டஞ்ச மேய்ந்துசே வினம லைந்திட், டிரவிமதி யெழுகருங் கடலி னொரு பாற்கட லிருந்ததே வைத்து திப்பாம்-பண்டைவினை மலமறத் தொண்டருக் கருள்பெருகு பன்னிரண் டம்பகத் தெம், பண்ணவனை விண்ணவர்கள் பரவுசிங் கைப்பதிப் பக வனைக் காக்க வென்றே. (க)

சொக்கநாதசுவாமி
வேறு.

அருண வெற்பினடி முடிய டுத்திலரை யன்று தரித்தி ட்ட சோதியைப் பார்ப்பதி, யமலை சத்வகுணி குமரி முற்று லகு மன்பா லளித்திட்ட தேவியைப் பாற்பெறு-திரண மொ த்துலகை நினையு மெய்த்தவர்கள் சிந்தா சனத்துற்ற தேவ னைக் காத்தழை, திரண்ம ருப்பின்மத கரிபி டிக்குதவு சிங்கா புரிச்சொக்க நாதனைப் போற்றுதும் - பிரண வப்பொருளி னிலையு ணாத்தியென வஞ்சா விழித்திட்ட வேதனைத் தாக் குபு, பிரச பத்மபத முடியு றப்பரவு மந்தா னிலப்பொற்றை யோகியைத் தேற்றிய - புரண சற்குருவை யரும றைத்து ணையை யிந்த்ராணி பெற்றிட்ட யானையைப் போர்த்தொ ழிற், புளினர் மெய்த்த தவ நெறி தழைப்பவரு பைங்கோ தையைப்பெட்ட காளையைக் காக்கவே. (உ)

மீனாட்சியம்மை.
வேறு.

கம்பக் காரின்மீ னாட்டிமக் கோட்டிறை கன்றித் தீமக மாற்றுறத் தோற்றிய - செம்பொற் றேரின்வா னாட்டினைக்

காட்டுறு, சிங்கப் பூரின்மீ னாட்சியைப் போற்றுது-மும்பர்க் காளவா னாட்டினைக் காட்டிவி, றுந்தச் சூரனு டாற்றலைப் பா ற்றிய - கொம்பிற் கோலநீள் வேட்டுவக் கோற்றொடி, கொஞ் சிக் கூடுதோண் மூர்த்தியைக் காக்கவே. (௩)

சித்திவிநாயகர்.

வேறு.

தற்பமொ டாடமர் தந்தவக் கோட்டிபன், சட்டக மாள வொர் கொம்பினைப் போக்கிய - சிற்பர யோகியர் சிந்தையிற் பூத்திடு, சித்திவி நாயக னங்கழற் போற்றுதுங்-கற்பக நீழலை யிந்திரற் காக்கிய, கற்றவர் பேரவை வந்துமெய்ப் பாத்தரு - முற்பவ வேரற வன்பரைக் காத்தரு, ளுத்தமர் மேவிய சிங் கையற் காக்கவே. (௪)

பிரமதேவர்.

வேறு.

பாய்திரை யுடுத்தகா சினியுமா காயப் பரப்புநா கேசர் பயிலும், பாதல வரைப்புஞ் சராசர வருக்கம் பராயபுவ னப் பொம் மனு - மேயபல வண்டகோ டிகளுமொரு பகலிடை விதித்திரவி லொழிய மீட்டு, மீட்டும்விளை யாட்டினிற் கூட் டுமொரு தோட்டலரின் விஞ்சயனை யஞ்சலிப் பாம் - தாயி லன் புடையனுக் கடையனு மோகவெஞ் சலதியி லுழக்கு மெனையுந், தண்ணளி புரிந்துதனை யெண்ணவருண் மெய்ஞ் ஞான சற்குருவை யருவை யுருவைச் - சேயபெரு வெளி யைநிறை யொளியையகி லமுமான சிற்பரம் பொருளை மரு

ளர், சிந்தனைக் கெட்டாத கந்தவேளைப்பரமர் சேயைப் புரக்க வென்றே. (ரு)

திருமகள்.

தன்னருளடைந்திடத் தக்கதவ நன்னெறி தழைத்தவளா யளகை யானுந், தனதனுக் குங்கடைக் கண்ணாற் பணித்திறஞ் சாற்றுபவ ளாகச் செயா - மன்னுமிர சிதகிரித் துஞ்சுமஞ் சிற்றுத்த வாரிமிசை மாலகல மா, மஞ்சத் திருக்குமொரு கஞ்சத் திருக்குமரி மாண்கழல்க ளஞ்சலிப் பாம் - பொன்னுலக வரசுமைக் தருநிழலு மயிராணி போகமுதலெண்ணு நலனும், புருகூத னெய்தமா னன்னகட் டுவரிதழ்ப் புணர்முலைச் சுரமக ளிருங் - கொன்னிலவு புத்தேளிர் குழுவுநிறை போகவெங் குறைகட றிளைப்ப வடிவேல், கொண்டசெங் கரதலனை யெண்டகைய சிங்கைவரு குமரனைக் காக்க வென்றே. (சு)

கலைமகள்.

செங்கமலை கொண்கன்முற் றேவர்மா னுடரானை சிதலெறும் பீற தான, சிவகோ டிகளுமுங் கையினீங்க நான்முகன் செய்யநா வுற்ற கனியைப் - பொங்குவெண் டாளவடமுலைமிசைக் கயிலையிற் போதருவி யேய்ப்ப வெள்ளைப், புண்டரிக மஞ்சமிசை யஞ்சமிசை யத்தங்கு பூரணியை யஞ்சலிப்பா - மங்கனக மாமேரு விற்குனித் தவுணர்புர மட்டகரு ணல யர்க்கு, மாருயிர்ப் பொம்மன்முழு தும்பெற்று முதிராத வம்மைக்கும் வாய்த்த சேயைத் - தொங்கலென வங்கடம் பணிபுயனை யழகனைத் துரியமுடி வுற்ற பொருளைத்,

துங்கமலி சிங்கையம் பதிமருவு சண்முகத் தோள்றலைக் காக்க வென்றே. (எ)

## இந்திரன்.

### வேறு.

விண்டலத் தரசு வாழ்வுறப் போற்றுபு, வெண்டழற் கணயி ராவதப் பூட்கையைக் - கொண்டலைக் கடவு தீரனைப் போர்த்தெழு. குன்ற டார்த்தபுரு கூதனைப் போற்றுது - மண்ட ருச்கரிய பேருருக் காட்சியை, யன்றடற்கணவு ணதிபற் காக்கிய - திண்டி றற்சமர வேலனைச் சீர்த்திகொள், சிங்கை யிற்குமர நாதனைக் காக்கவே. (அ)

## சப்தமாதர்.

### வேறு.

திற லிபங்கொளுரி மேலுறப் போர்த்தவள் சிலையை யன்றுமக ளாகுறப் பார்த்தவ, டிரம லிந்தபல நூலினிற் கூர்த்தவ டிருகு குன்றலைய வேல்விடுத் தார்த்தவ - ளெறுழ்ம லிந்தமகி டாசுரற் றீர்த்தவ ளிருநி லங்குலைய வாலெயிற் றூர்த்தவ, ளிலகு வெண்கரியின் மீமிசைப் போர்த்தவ ளெழும டந்தையர்க டாண்முடிச் சூட்டுது - நறும ணங்கமழ்கு ராமலர்ப் பூத்தொடை நகுக டம்பணிபு யாசலத் தீர்த்தனை, நளின மங்கையர்ப ராயெடுத் தேத்தரு ணயன மங்கலைபி மாசலைக் கேற்றதொர் - விறலி லங்குமக வாமனத் தோற்றிய விமல சம்ப்ரமசி ராமயக் காட்சியை, விளரி வண்டுவிரி தாமனாச் சேக்கையில் விரவு சிங்கைமுரு கேசனைக் காக்கவே.

முப்பத்துமுக்கோடிதேவர்கள்.

வேறு.

முப்பா லுரைக்குமறை யிற்பா டுருத்திரர் முயங்குபுக ழாதித் தரோ, முன்னுக மொழிகின்ற தன்னிகரின் முப்பத்து முக்கோடி தேவர் காக்க - வெப்பேறு முடல்வழுதி யஃதொழிந் திடேற வீடேற வாய்த்த தென்சொல், வேதமே றிய செம்மை யேடுசெந் தீயேறி மிக்குறும் பசுமை யேற - வப்பேறி மீட்டுமஃ தெதிரேற மானிக் கமைச்சுக்கு முவகை யேற, வறிவிலம ணுதர்வெங் கழுவேற வெண்ணீறு டஞ்செழுத் தெங்கு மேற - வொப்பேறி லாததா ளச்சிவிகை மீதேறி யொண்டமிழ்க் கூடல் வந்த, வுண்மைஞா னக்கதிர் பரப்புசுட ரைச்சிங்கை யொருவாத குருபரனையே. (க0)

காப்புப்பருவமுற்றிற்று.

---

## செங்கீரைப்பருவம்.

---

அங்கமல மெளிதினி லளிக்குமல ரடிகளிலொ ரடிமடித் தொருக மூற்று, ளலரணை யெடுத்தூன்றி மாமலைய வெற்புறை யகத்திய மகாமுனி வரன் - றங்கமலி யுஞ்சிர மமைத்தசெங் கைமலர்க டேயவணை யூன்றி யமரர், தொன்மை மறை முதலகலை விண்டுவெய னுதியர் தொடர்ந்தறி தரப்படாத - வங்கனக மாமுடிகண் மீமிசை யெடுத்துநம தருணயன வொளிய லாவின், ருலொளி நமக்கெனக் கதிர்மதிக்

சடவுளர்க் கறிவுறத் தேற்று மாபோற் - செங்கமல மலர்முக மசைந்துகுழை வில்லிடச் செங்கீரை யாடி யருளே, செங் கணம் புயைமருவு சிங்கையம் பதிமுருக செங்கீரை யாடி யருளே. (சு)

இருவகைத் தாமரையின் மீமிசைத் தங்கிவள ரோங்தெ ழிற் சேடி மாத, ரெள்ளிய லிகந்தகுல வொள்ளிய மணிக்கு வை யிழைத்தமஞ் சத்தி யாத்த - விரிநிலவு கான்மணி வடம் பற்றி யகிலமும் விராயசர வசர வுயிரு, மெய்யருளி னூற் பெற்று மையுருவ முதிராமை மேவியபி ராட்டி யார்க்கோ - ரரியதவ முளையேயெ மிறைவர்வாழ் வுஞ்சசி யணிந்தமாங் கலிய நாணு, மறநெறியர் பொருளிற் றழைப்பவய லார்பொ ருளி னவுணர்மா ளச்ச மர்த்த - திரமருவு குமரவென் றூட்ட வறி துயில்குழவி செங்கீரை யாடி யருளே, செங்கணம் புயைமருவு சிங்கையம் பதிமுருக செங்கீரை யாடி யருளே.

அண்டகோ டிகண்முழுது மாக்கியும் போக்கியு மளித் துமிறு வாய ழித்து, மரியமுத் தொழினிலைமை புரியவத் தலைவர்வரு மலரியெதி ரம்பு யத்தின்-மண்டுதன் சந்நிதியின் மாண்பினெக் காலமு மாறு தியற்ற வாளா, மல்குதலு மல் குதலு மற்றின்ப வானந்த மயமாகி வீற்றி ருக்குந்-தொண் டரன் பொழுகிதய புண்டரிக மகலாத சோதிக்கு மவர்பாதி வாழ், தோகையஞ் சாயல்புனை யேகநா யகியமலை சொற்பு கழி மாசலைக் குந்-தெண்டிரைாத ராவமுதின் வந்தருளி ளங் குழவி செங்கீரை யாடி யருளே, செங்கணம் புயைமருவு சிங்கையம் பதிமுருக செங்கீரை யாடி யருளே. (ரு)

நீனிற முகுந்தன்முதல் வானவர் குழாமுமனு நிகழு மாந் தாதா முத, னின்றறும் பூவாணர் வர்க்கமுங் கட்செ விய நிருபன்முத ணுகர் நிரையு - மானவரி கரிமுதல் விலங்கு பறவைகணீ ரடங்குமுயிர் சிதலெறும்பீ, ருயவுயி ருங் காம வெள்ளந் திளைப்பமல ரயன்முனோர் தொழி னடைப்பக்- கானிலவு தருநிழற் செல்வன்வா ழத்தருங் கரகநீ ரோடு தெய்வக், கன்னிகுஞ் சரியையுங் கைக்கொண்டு திருமணக் காட்சியுல குய்ய வைத்த - தேனிலவு பைங்கடம் பணிதடம் புயமீளி செங்கீரை யாடி யருளே, செங்கணம் புயைமருவு சிங்கையம் பதிமுருக செங்கீரை யாடி யருளே. (ச)

இந்திரவ ருக்கங்கள் கோடியொரு சிறைகூடி யீண்டி யமை யங்கு றிப்ப, வெண்டகைய முண்டகா சனர்கோடி கோடிவந் தீண்டியொரு பாலு ணங்க - நந்தணித ருங்கரத் திந்திரைம ணளர்பலர் காடியிமை யார்க ணிற்ப, நாட்டுமுல குயிர்முழுதும் வீட்டுருத் திரர்குழா நண்ணுமிட னோக்க விமையோர் - வந்துவர் தாடலம் புயவீர னேச்சுவய மாற்ற டிக்கஞ்சி நிற்ப, மறுவிலடி யவரிரு மருங்கினி னெருங்க வொளி வளர்கந்த கிரியி லடியார் - சிந்தையென வீற்றிருக் குங்குமர நாயகன் செங்கீரை யாடி யருளே, செங்கணம் புயைமருவு சிங்கையம் பதிமுருக செங்கீரை யாடி யருளே.

கந்தமலி யுந்திரை நெடுங்கைகொடு சங்கெறி கறங்குசர வணவா வியிற், காமரடி யாரிதய மாமலரொ ணத்தகைய கஞ்சமல ரணையி லீண்டி - வந்தகந் தருவமறை விஞ்சையிரு

முனிவரரின் மண்டுசிறை வண்டு பாட, வாலொளிசெறிந்த பல கோடிசூ ரியருதய மானவொரு குழவி யாகி - யெந்தை யெம ருந்தவமெ மக்குயிரெ மிருநயன மெண்ணுபவ ரெண்ணி யாங்கே, யெய்தவரு ளும்பிரம மீண்டுவரு கென்னமூ வீருருக் கொண்டா ரலார் - சிந்தைகளி யாடவிளை யாடியப சுங்குழவி செங்கீரை யாடி யருளே, செங்கணம் புயைமருவு சிங்கையம் பதிமுருக செங்கீரை யாடி யருளே. (சு)

வேறு.

கம்பக் கரிமுக வெந்தைக் கிளையவ கம்போ துஞ்சீரார்; கண்டத் திரிபுரை குன்றக் குலமக ளின்பா ருஞ்சேயே - கும்பப் புணர்முலை மின்பொற் புறுசசி கொண்டா டும்போ தார், கொம்பிற் றிகழ்மகள் வம்பைப் பொருமிரு குன்றே றுந்தோளா - வம்பொத் திலகுநெ டுங்கட் குறமகள் கண்டோ டுந்தேனு, ரஞ்சொற் குதலைவி ரும்பிப் புனமுழு தும்போ தூந்தாளா - செம்பொற் சிகரிகொள் சிங்கைக் கதிபதி செங்கோ செங்கீரை, செந்திற் பதியம ருஞ்சற் குருமணி செங்கோ செங்கீரை. (எ)

இன்சொற் றமிழுரை சந்தச் செறிபொழின் மென்கா வுஞ்சாரு, மெண்டிக் கிசைபொதி யம்பொற் புறவரு வெம்பா சங்காதுந் - தென்சொற் குறுமுனி வந்தித் திருபத மன்போ டுந்தாழச், சிந்தித் திடமறை யந்தத் துறுபொரு டந்தா ளுங்கோவே - வன்சொற் றிறலரி வெங்கட் கயமுக னுஞ்சூ ருஞ்சாய, வந்தட் டமரர்கள் சிந்தைத் துயர்முழு துங்கா துந்தீரா - செஞ்சொற் புகழ்கெழு சிங்கைக் கதிபதி

செங்கோ செங்கீரை, செந்திற் பதியம ருஞ்சற் குருமணி
செங்கோ செங்கீரை. (அ)

அருவமு முருவமு மருவுரு வும்பெறு மொன்பா னெ
ன்றோது, மருளுரு வுடையதொர் கருணைநெ டுங்கடல் கொ
ண்டா டுஞ்சேயே - கருவயின் மருவுறு பெருகும ரந்தைய
வெந்தா பந்தீரக், கனைகழ லடிநிழ லடியர்பு குந்திட வந்தா
ளுந்தேவே - வெருவற மகமுறு மொருதக ரண்டமு டைந்
தே திண்டாட, விறலிய நிலகுல தரமிசை கொண்டு நடந்
தோய் வண்டாடுந் - திருமலர் நிறைதட மருவிய சிங்கைய
செங்கோ செங்கீரை, செகமுழு துதவிய பரையரு ளிங்கித
செங்கோ செங்கீரை. (கூ)

ஆரண நாரண னுடவ ரும்பொரு ளாடுக செங்கீரை
யானன மாறொடு மேயப ரம்பர னுடுக செங்கீரை
காரண காரிய மாதியி கந்தவ னுடுக செங்கீரை [ரை
காமரொர் கோடியர் நாணெழில் கொண்டவ னுடுக செங்கீ
பூரண மாயுயிர் தோறுநி றைந்தவ னுடுக செங்கீரை
போதலு மீளலு மோவிய செஞ்சுட ராடுக செங்கீரை
தோரணி வீதிவி ழாமலி சிங்கைய னுடுக செங்கீரை
தேவர் பராவுகல் யாண சவுந்தர னுடுக செங்கீரை. (க0)

செங்கீரைப்பருவ முற்றிற்று.

---

## தாலப்பருவம்.

தணியா வேட்கை யுட்கிடப்பத் தையன் மடவார் மே னிலத்திற், றம்மை யிரந்து பலவேண்டித் தாளிற் பஞ்சி திரு த்தவரும் - பணியார் பணிய வினைத்திறஞ்செய் பஞ்ச பா ணங் கழைவிலொரீஇப், படிவ மொருவா மதனனைய பல வாடவர்கள் வன்கணையாற் - கணியா மோகப் பேரிருளிற் கலங்கக் கரிய நெடியதடங், கண்கள் சிவந்து மீட்டுமவர் கல க்கமகல நகைமுகிழ்க்கு - மணியார் சிங்கைப் பதிவடிவே லரசே தாலோ தாலேலோ, வருளா னந்தக் கடற்பிறந்த வமுதே தாலோ தாலேலோ. (க)

வில்லுற் றிமைக்கும் விலைபோய விளங்கும் பசிய மாக தத்தும், விண்ணி லிரவி கண்ணுமருள் விரவ வொளிர்மா நீலத்து - மெல்லிற் பொலியும் ரவிகோடி யென்னத் திகழு மரதனத்து, மீண்டு மொளிசேர் வயிரத்து மிழைக்கப் பட்டு வெவ்வேருய் - மல்லற் றிருவிற் பொலிமாட மாலை யொளி யான் முப்போது, மாறு தாக்க வெப்போதும் வனசப்போது முலைப்போது - மல்லிப் போது மலர்சிங்கைக் கரசே தாலோ தாலேலோ, வருளா னந்தக் கடற்பிறந்த வமுதே தாலோ தாலேலோ. (உ)

கொண்ட லிசையும் பசியகுழற் கூந்த ருங்கி யிருகன கக், குன்றஞ் சுமந்த கொம்பனைய கோல மடவார் மேனில த்தின் - மண்டு கழங்கம் மனையெழப்போம் வழியில் விழியு

மனமுமெழ, மாளுர் நோக்கி யிருவிழியு மறந்து மிமையா தாடவவர் - தண்டா வனப்பை மொண்டுண்டு தடங்கண்ணி மையா தாடவர்க, டாமு மிருப்ப வேறண்டந் தங்கு மிமை யோ ரெனமடவா - ரண்ட ரயிர்க்குஞ் சிங்கைநகர்க் கரசே தாலோ தாலேலோ, வருளா னந்தக் கடற்பிறந்த வமுதே தாலோ தாலேலோ. (ங)

முரவை போய முல்லைநறு முகையின் முழுத்த தண்டு லத்தின், முற்று மடிசில் பொற்பிதிரின் முதிராப் புழுக்கல் பலகருனை - விரவு துவையல் வகைநெய்பால் விழுத்த தயிர் சிற் றுண்டிபல, வெள்ளிப் பொருப்பும் பொற்கோடும் விழு மென் னிழுமென் னருவிகளும் - பொருவில் பாங்கிற் கிரி யெட்டும் பொருவ வாக்கி யுண்குநர்க்கும், போது வார்க்கு மனைதொறும் பொருந்து முபசா ரங்கள்புரி - யரவ மகலாச் சிங்கைநகர்க் கரசே தாலோ தாலேலோ, வருளா னந்தக் கடற்பிறந்த வமுதே தாலோ தாலேலோ. (ச)

நீலக் கிரியிற் கண்டுயிலு நெடியோன் பதறி விழிப்ப வவ, னெஞ்சிற் றிருவும் புவிக்கொடியு நீளைக்கொடியு மனைத்திரங்கப் - பாலப் பருவத் துந்திமலர்ப் பசுமென் குதலை மறைக்குழவி, பரிந்து பரிந்தன் னையர்வதனம் பார்த்துப் பார்த்துத் தேம்பியழக் - காலக் கடலிற் படர்ந்தமுதக் கடலுங் கதறச் சிறையடித்துக், கடுங்கட் சேடன் படமுதறிக் கவ்வு மயிலிற் பவனிவரு - மாலைப் பழனச் சிங்கைநகர்க் கரசே தாலோ தாலேலோ, வருளா னந்தக் கடற்பிறந்த வமுதே தாலோ தாலேலோ. (ரு)

வேறு.

பங்கமி றெண்டர்கள் சிந்தையெ னுந்தவி சேறு மேவா நீள், பந்தனை வெம்பவ மென்பகை சிந்திட நூறு மாறாதே - யங்கணி றைந்துத தும்பரு டந்தனில் வேறு யாகாதே, யண்டவ ருஞ்சுக வின்பம டைந்திட வாளா யாள்வோனே - துங்கம லிந்தசு மங்கலை பிங்கலை பாலா வேல்வீரா, தும்பைய ணிந்தநெ டுஞ்சடை யங்கணர் சேயே நூலாய்வோர் - தங்குவ ளம்பொலி சிங்கைவ ருங்குக தாலோ தாலேலோ, சங்கமி ருந்தவர் துங்கமு ணர்ந்தவ தாலோ தாலேலோ. ()

இந்திர னுஞ்சசி மாதும் வளங்கெழு சீர்வா னுடாள்வா, னெண்டரு குஞ்சரி தோளை மணந்திடு காளாய் வாளேபோ- லந்தம லிந்தகன் வேடர ருந்தவ மானுள் பாலேகா, வன்பு புரிந்தவள் சீறடி வந்திசெய் மோகாதார்வாகா - பந்தனை நைந்திட வேயரி றைஞ்சியபாதா வேதாளா, பங்கய னெண்கண னீண்முடி மோதிய தோளா வேல்வீரா - சந்தத மும்பர்கள் சேவைசெய் சிங்கைய தாலோ தாலேலோ, சங்கமி ருந்தவர் துங்கமு ணர்ந்தவ தாலோ தாலேலோ. (எ)

முக்க ணுடைப்பர மற்கருள் சற்குரு நாதா பூதேசா, முத்தி யுறத்தொழு பத்தரை யுய்த்திடு நீதா மாதேவா - கைக்கண் விறற்பொலி சக்கரம் வைத்திடு கார்மால் சீரோ வாக், கச்சியி லற்பின்வ ழுத்தவ ருட்படி வீவோய் தீவாயா- ருக்கிர வெற்றிய யிற்படை யுற்றகை வீரா தார்மார்பா, வுற்பவ வெப்பம றுத்தரு ளைத்தரு தேவா தேவேசா - தக்

சனை வெட்டிய வற்புதன் மெய்த்துணை தாலோ தாலேலோ,
தற்பர சிற்பர னுக்கொரு மெய்ப்பொரு டாலோ தாலே
லோ. (அ)

வேறு.

மந்திர மேயுரு வாகவி ளங்கிய வாழ்வே தாலேலோ
வஞ்சனி பால்வரு சூரனை வென்றிடு வாகா தாலேலோ
புந்தியி னூடினி தாகம ணந்தெழு தேனே தாலேலோ
புன்செய லாளர்கள் காணரி தாகிய போதா தாலேலோ
வெந்திற லோடெழு மேடக டாவிய வீரா தாலேலோ
விஞ்சைகொள் வேதியர் வேள்வி புரந்திடு வேலா தாலேலோ
தந்திர வேத புராண மெலாமுரை தாயே தாலேலோ
சங்க முலாவிய சிங்கை புராதிப தாலோ தாலேலோ. (கூ)

வேறு.

அருணைவெற் புருவ முடையருட் பரமர் தந்தரு ளின்
புள சேயே தாலேலோ, வமணருட் கிளை கழுவிலுற்
றுலைய விண்டருள் செந்தமிழ் வாயா தாலேலோ - கருணை
பைத்தொழுகு கடனி றைத்தவிழி தந்துமெ யன்பரை யாள்
வாய் தாலேலோ, கனக வெற்பிலகி லமுமு டைப்படிவு கண்
டிட வும்பர்க ளிவோய் தாலேலோ - புரண முற்றுயிர்க
டொறுமி ருக்குமலை மங்கைய ருந்தவ வாழ்வே தாலேலோ,
புளினர் பெற்றகிளி யினிய சொற்குருகி யன்றுபு னத்திரி
தாளா தாலேலோ - தரணி முற்றுமக டுறவ டக்கியமு குந்
தனி றைஞ்சிய வேலா தாலேலோ, தமர மிக்கிலகு பமர நற்
பொழில்கொள் சிங்கைவ ருங்குக தாலோ தாலேலோ. (கல)

தாலப்பருவ முற்றிற்று.

## சப்பாணிப்பருவம்.

விண்ணளிக் குஞ்சுடர் விரிக்குந் திரைக்கடலின் மீ தெழு கதிர்க் கடவுளும், வெள்ளமுது வானவர்கள் கொள்ளை கொண் டிடநல்கு வெண்மதி யெனுங் கடவுளு - மண்ணளித் தெங்குமலி காலெனுங் கடவுளு மயங்கமக மேருவோடு, மாறுகொண் டான்றுதிக் கெலலைவரை யண்டமுடி மட்டினு நிமிர்ந்த விந்த - மெண்ணளிர்க் கடலுமற னில்லார்கள் வாழ் வென விளைத்தெளி தடங்கவோர்கை, யெழின்மலர் துலக்கு முனிராசனுக் கத்துவித மெய்தவவன் முடிய மைத்த - தண்ணளிப் புஞ்சநிறை கைக்கமல மலர்கொண்டு சப்பாணி கொட்டி யருளே, தண்டரும் பொற்சிகரி மண்டுசிங் கைக் குமர சப்பாணி கொட்டி யருளே. (க)

ஆக்கத் தனிக்குமரி யமருமரு மக்கடவு ளணியுந்தி மலரில் வந்திட், டரியமறை முதலகலை தலைதெரிந் தெண்ட கைய வண்டமுழு தும்படைத்துக் - காந்கத்தன் முதலமரர் முடியடி யுறத்தொழக் கஞ்சமல ரணையின் மேவிக், கற்றவர் சொன் முத்தொழிலின் முற்றொழிலி யற்றுமக் கடவுளை யகந்தை யென்னுந் - தீக்கட் கொடும்பிணி யகற்றியா ளக்க டாய்ச் சிற்பிரண வப்பொருளவன், றேறான் மயங்குறக் கண்டுகண் சேந்துநாற் சேகர மலங்க மோதித்-தாக்கிச் சிவ ந்தசெந் தாமரைச் செங்கைகொடு சப்பாணி கொட்டி யருளே, தண்டரும் பொற்சிகரி மண்டுசிங் கைக்குமர சப்பாணி கொட்டி யருளே. (உ)

பொன்னிலவு மேருப் பொருப்பினை வளைத்தவுணர் புறமுறத் தழனி மிர்த்த, போரேறு நீரேறு மோரே றுயர்த் திட்ட புண்ணியம் பூத்த கொம்பிற் - றென்னிலவு பைங்கு மூற் செய்யவாய் வெண்ணகைச் சேனிகர் தருங் கருங்கட், டெய்வநா யகிதழுவு சைவநா யகனெனுஞ் சிற்பரஞ் சுடரளித்த - மின்னிலவு பொற்றுள மேற்றுப் பிறங்குமறை மெய்ப்பொருள் வடித்தெடுத்த, மேதகு மிசைப்பதிக மோது தற் கேற்றிட விரைத்தொற்றி யொற்றி மிளிருந் - தன்னிகரில் செங்கைத் தலங்கொண்டு மழகளிறு சப்பாணி கொட்டியருளே, தண்டரும் பொற்சிகரி மண்டுசெங் கைக்குமர சப்பாணி கொட்டி யருளே. (௩)

காருடற் செங்கட் குறுங்கா னெடும்பேய்க் கணங்கள் கூட் டுண்ண விண்ணிற், கண்ணா யிரம்பெற்ற விண்ணோன் முதற்றேவர் கண்டுகளி கூர வார்விற் - பேரொலி யடங்காப் பறந்தலை நிலத்தவுணர் பெம்மா னிறைந்த மாயப், பெற்றியினனந்தவடி வுற்றமர் தரும்பொழுது பேசுமொரு போதவாளி - வீரமுற வுய்த்தந்த மாயைதரு வினைவெலாம் விட்டியொரு நொடியிலோட்டி, வெறியனே ரலனின்ற நிலை கண்டு புன்முறுவன் மிக்கொன்றொன் றொன்று தாக்குந் - தாருலவு செங்கைத் தலங்கொண்டு குமரவேள் சப்பாணி கொட்டி யருளே, தண்டரும் பொற்சிகரி மண்டுசெங் கைக்குமர சப்பாணி கொட்டி யருளே. (௪)

செடித்தலை யிடிக்குரற் செங்கட் கருங்குறவர் செந்தினைப் பைம்புனத்திற், றித்திக்கு மழலைப் பசுங்குதலை யின்

சொற் றெரிந்துகிளி யோட்டெ டேப்பப் - பிடிக்குல நடைக் கஞ்சி யோடநோக் குக்குப் பிறங்கிரலை யஞ்சி யோடப், பெ ண்ணுருக் கொண்டமுத நண்ணியதெ னத்தங்கு பெய்வளை க் குறமடந்தை - யடிக்குப் பரிந்துசெம் பஞ்சூட்டி நேருற வலங்குபரி புரம ணிந்திட், டணிமுலைக் குறுதொய்யிலெழு திநிறை குங்குமமு மப்பிமை விழிக்க ணிந்து - தடித்தன விடைக்கொட்டி யாணமணி செங்கைகொடு சப்பாணி கொ ட்டி யருளே, தண்டரும் பொற்சிகரி மண்டுசிங் கைக்குமர சப்பாணி கொட்டி யருளே. (ரு)

வேறு.

வானத் துறுபல நாளொடு கோள்களி மண்ணிடை வீழாமே, மண்டலை யுண்டெழு கொண்டல்கள் கண்டெதிர் வயிறுகு ழும்பாமே - தானத் துறுதறு கட்டிசை வேழஞ் சாம்பிச் சாயாமே, தமனிய மலையொடு மயன்மலை யெட்டுந் தட்டழி வாகாமே - யேனத் தனியுரு வெண்ணுபு மாயவ னேங்கிச் சோராமே, யேடவிழ் தார்புனை சேடன்மு னுகர்க ளெண்ணியி ரங்காமே - கோனத் திசைசிங் கைக்கிறை மெல் லக் கொட்டுக சப்பாணி, குன்றக் குலமக ளுக்கொரு கான் முளை கொட்டுக சப்பாணி. (சு)

கருணை யுவட்டெழு கடலை யடக்கிய கட்கடை நிட்சேபா, கமல மலர்த்திரு மகள்கொழு நற்கரு ளைத்தரு மெய்ப்போ தா - மூரணின் மிகுத்திடு மவுண ருடற்குறை யெட்டுளை திக்காடா, முடிய விறற்பொலி யவுணரை வெட்டிய முற்படு விற்றீரா - மரண விருட்டொடு சென்ன விருட்டற முற்படு

சிற்பானூ, மதியி னிறுத்திய வடியர் நினைத்தவ னைத்துமளிப்போனே - குரவொடு செச்சைகொ டொடையன் மிலேச்சிறை கொட்டுக சப்பாணி, குறவர் குலக்கொடி தழுவுவிறற்புய கொட்டுக சப்பாணி. (எ)

இடிபட் டிடுசூர லவுணப் பிணமலை யெட்டுள வெற்பாக, வெழுமைக் கடலுவ கழியப் புகவினி ரத்தம டுத்தோட - முடியற் றிடுகுறை யுடனிர்த் தனமிட முற்றுகளத்தூடே, முடுகிப் பலகடி கடுகிக் குடறசை முக்கியிரைத்தாடக்-கடிசுற் றியதரு மலரிட் டிமையவ ருட்களி மிக்கேறக், கரமுற் றிடுசிலை குழையக் கணைமழை யுய்த்தகரத்தாலே-குடிலைப் பொருள்பர சிவனுக் கருண்முதல் கொட்டுக சப்பாணி, குலவெற் பிறைதரு குமரிக் கிருவிழி கொட்டுக சப்பாணி.

புந்தியு ணித்தம் விளைந்து ருசித்திடு புத்தமு தத்தாறே
புன்க ணுடைத்தெமர் வெம்பவ வெப்பமகற் றும லர்க்காவே
சந்தத மற்பொடு மும்பர் வழுத்த விருக்குமு தற்றேவே
சஞ்சல மற்றவர் சிந்தையிருட்டையொழிக்கும்விழித்தாயே
நந்தணி கைத்தல னெந்தை யுருப்பெற வுய்த்திடு சொற்போ
நஞ்ச மடக்கிய கண்டனு மைக்கென வுற்றத வப்பேறே[தா
கொந்தள கக்குற மங்கை யுயிர்த்துணை கொட்டுக சப்பாணி
குஞ்சரி யைத்தழு வுங்கரு ணைப்புயல் கொட்டுக சப்பாணி.

ஆனன மாறுள ஞானபு ராதன கொட்டுக சப்பாணி
யாறிரு தோளுள வாகம வாகா கொட்டுக சப்பாணி
பானு நிலாவழ லாகிய பார்வைய கொட்டுக சப்பாணி

பானலி னீள்விழி மான்மக ளுபசு கொட்டுக சப்பாணி
பூனுயி ரோடட னுயய லானவ கொட்டுக சப்பாணி
யோகையி னீடடி யார்நினை வீபவ கொட்டுக சப்பாணி
கோனக ராள்புரு கூதனை யாளிறை கொட்டுக சப்பாணி
கோலமு லாமயி லேறிய சேவக கொட்டுக சப்பாணி. (கo)

சப்பாணிப்பருவ முற்றிற்று.

---

## முத்தப்பருவம்.

அரச ரிளங்கா ளையரிரதத் தாழி யொலிக்குப் போழி, யலைக்கை கொடுபன் மணித் திரைக ளளக்க வளக்கர் சூழ்பு விசு - ழிரவி யிரதப் பரியவர்க ளிரதப் பரியின் கதிராணி, யிரவும் பகலுங் கண்ணிமையா தீர்த்துப் பழக வவரெழிற் குப் - பொருவின் மதன னுருவழியப் பொன்னாட் டிறை கண் ணுயிரமும், பொருந்தா னுகத் தனிப்பவனி போது மறு கிற் கடிமுகன்மும் - முரசு முழங்குஞ் சிங்கைநகர் முருகா முத்தந் தருகவே,முத்தர்க் கருடற் பரஞான முதல்வா முத் தந் தருகவே. (க)

வேரிக் கமுகுங் குலைத்தெங்கும் விண்ணாட் டவர்க்கு முதிர்வேனில், வெப்ப மகற்றி நிழல்பரப்பி மென்கா றரு பொற் கவரியெனப் - பாரப் பாளை புடையிரட்டிப் பருக விளநீ ரளித்தடைக்காய், படர்மெல் லிலைபு னிவழங்கப் பரு உக்கை னோன்றட் பிடிபுலவி - தீரக் கவளங் கற்பகப்பூஞ் சினைகண் முறித்து நல்கிமுகிற், செறிநீர் பிழிந்து வாய்ப்

பெய்து திளைத்து மகிழுந் தெறுகோட்டு - மூரிக் களிறூர் சிங்கைநகர் முருகா முத்தந் தருகவே, முத்தர்க் கருடற் பரஞான முதல்வா முத்தந் தருகவே. (உ)

மயங்குஞ் சாதிக் கடம்வறப்ப மாந்திச் சாந்துற் றேந்து முலை, மள்ள மடவா ருள்ளமருண் மண்டித் தண்டா மரையவிழ்க்கு - மியங்கு மாலைச் செங்கதிர்கண் டீண்டு பொழிலிற் செங்கனியீ, தின்னே தம்மின் வம்மினென வேன்று தம்மோ டடன்மதுவுண் - டயங்கி மதிமான் றிடுமுழவர்க் குரைப்ப வவர்வா னுறநோக்க, வொளிய பானுச் சூர் மகன்பல் லுருக்கொண் டுறுங்கொ லெனக்கடல்வாய் - முயங்கும் பழனச் சிங்கைநகர் முருகா முத்தந் தருகவே, முத்தர்க் கருடற் பரஞான முதல்வா முத்தந் தருகவே. (ங)

கொத்திட் டிரைக்கும் பலதிரைக்கை கொண்டு கொடுஞ்சூ ரிருக்கவிடன், கொடுத்த குறையுங் கூடறெறக் குறுகிக் குறுகி குறையுமலை - மத்திட் டிரைத்து மதித்துழிநின் வள்ளற் றூதைகொ ளநஞ்சம், வழங்கு குறையு முளங்கொள்ளேல் வரதவாழி யெனவாழ்-புத்திட் டிரைக்கு மளிக்கண்டற் புதுத்தா டிமிர்ந்து மொக்குண்மணிப், பொற்றூர் தாங்கி முற்றுநிரை பொருவி னயன நீர்பாய-முத்திட் டிறைஞ்சுஞ் சிங்கைநகர் முருகா முத்தந் தருகவே, முத்தர்க் கருடற் பரஞான முதல்வா முத்தந் தருகவே. (ச)

பழங்கட் டிமிர விணையகற்றிப் பரமா னந்த சுகோதயத்திற், படர வடியார்க் கருள்கருணைப் பகவ னீயே தமிழ்ப்

பாண்டி-வழங்கிச் சிவந்த தடக்கைவிறல் வழுதி குமரி பாகு க்ர, மாற னெனவந் தமைதேறுன் மகவான் றருக்கி முடியி ழந்தான்-றழங்கிப் பொழியா தவனுரையாற் றளைப்பட் டே ம்யா மெமதுருறை, சாமி பொறுத்தி யென்னவிற்கார் தகை ந்து வார மும்முறையா-முழங்கிப் பொழியுஞ் சிங்கைநகர் முருகா முத்தந் தருகவே, முத்தர்க் கருடற் பரஞான முத ல்வா முத்தந் தருகவே. (ரு)

குருகார் தடத்துப் பகட்டெருமை குறுகி நெடுந்தாட் கடிக்கமலங், குதட்டிக் குதட்டிக் கடல்பருகுங் கொண்டல் புரையப் புகுந்துழக்க-வருகார் வாளைப் போத்துவெரீஇ யா ரக் கரும்பின் றலைசாய, வயலிற் கமுகுங் கழுத்தொடிய வம ரா பதிக்கற் பகக்காடும்-பொருகால் புகுமே ரண்டத்திற் பொலம்பூஞ் சினைகண் முறிந்துவிழப், பொன்னு டிகந்து வெடிபோய்மேற் போந்த தெங்கின் குலைசிதைக்கு-முருகார் பழனச் சிங்கைநகர் முருகா முத்தந் தருகவே, முத்தர்க் கருடற் பரஞான முதல்வா முத்தந் தருகவே. (சா)

வேறு.

நானில வளாகத் துயிர்த்தொகுதி யானந்த நன்னிலை மை யெய்த வான, நாட்டகத் தமரமர ரீட்டமந் நிலைகண்டு நனிமொறு மொறுப்ப வாடாப்-பானல்விழி யுடையமலை தருமமலை தருமணிப் பைம்பொன்வள் ளத்தி ரண்டு, பான் மைபெறு ஞானம் பரந்தொழுகு திருமுலைப் பாலுண்டு நீலு ண்டு மேல்-வானமட வார்கண்ட மங்கலத் தொடுமல்க வைத்

தமணி கண்ட ரருளு, மாமறைக் கடலையொரு மதியான் மதித்துநனி வடிகட்டி வாய்மை வைத்த-கானமலி செந்தமிழ்ப் பதிகவமு தந்தருங் கனிவாயின் முத்த மருளே, கங்கா நதிக்கினிய சிங்கா புரிக்கரசு கனிவாயின் முத்த மருளே. ()

விற்கொண்ட நறுநுதன் மலைக்கொடி யிடப்புறன் விராயொரு கணந்த ணத்தன், மேவா திருப்பவகி லாண்டசரவசரவுயிர் விருத்தியை யளித்து ஞான-வெற்கொண்ட நெறியடைந் தத்துவித நன்னிலைமை யெய்தியா னந்த மேவ, வெந்தையெமை யாளுடைய நந்தியந் தேவனவி வீரிருவர் சனகர் முன்னோர்-நற்கொண்ட னிறனுடைய நளினிகா தலனிசைகொ ளுமகட் கிறைவ னென்ன, நாட்டினர்க் காசிரிய நீட்டுநெறி பூட்டியரு ணல்குசற் குரவன் மகிழக் - கற்கண்டு மமுதமுங் கைப்பவொரு மொழிவிண்ட கனிவாயின் முத்த மருளே, கங்கா நதிக்கினிய சிங்காபு ரிக்கரசு கனிவாயின் முத்த மருளே. (அ)

வேறு.

கற்றமை வுற்றவ ருட்டிமி ரத்தையொ ழிக்குமொ ளிக்கதிரே, கற்பனை யற்றகி லத்துயிர் முற்றுந டத்துமு யிர்த்துணையே - பற்றறு சத்துவ சித்தர்தி ளைத்திடு மத்துவிதப்பொருளே, பற்பல சட்டக முற்றுழல் துட்டனெ னக்கும ருட்கொடையாய் - கொற்றம கட்புணர் வெற்றிம லர்த்தொடை சுற்றும யிற்படையாய், கொட்டவு டுக்களி ரக்கைபு டைத்தெழு குக்குட விற்கொடியாய் - முற்றுத மிழ்

ச்சொன்மு னிக்கருள் சற்குரு முத்த மளித்தருளே: முத்தரு ளத்தமு ளைத்தெழு கற்பக முத்த மளித்தருளே. (கூ)

வேறு.

அருகர் பெருகி மதுரை முழுது முழுக மயல்செ யற்றைநா, ளகில வுயிரு மிருளி னகல வலையி லிரவி யுற்றபோற் - பொருவில் வளவன் மகளின் வருமொர் புதிய வமுத மொத்துளாள், புரையின் மதியி னெனது மடமை பொதியு மதியு முற்றுளாள்-விரவு மகளி ரரசி மகிழ வொழிய வழுதி வெப்புநோய், விளிய வமணர் விழைய வமலன் விளையு நீறிசெய் விற்பனு-முருகு பெருகு குரவு விரவு முடிய தருக முத்தமே, முடியு மடியு நடுவு மிலதொர் முருக தருக முத்தமே. (க0)

முத்தப்பருவமுற்றிற்று.

---

## வருகைப்பருவம்.



பங்கய மலர்ந்துபல பரிதியுத யஞ்செய்த பாற்கடலை மானும் வானப், பைம்பொன்மா னதவாவி யூடுதிண் புயவீர பாகுமுத லிளைஞரோடு - வெங்கய முனிக்குழா மென்னப் புகுந்தாடி விட்புலம் விழுங்கி யூழி, வெள்ளமென வருபுனலி னதியாக்கி வானதியின் விரைசெலவு செங்கைகளாற்-பொங்கிகிமி ரத்தடுத் ததனையொரு மடுவிற் புரிந்திரு விழிச் செம் மையாற், பொருமலைக் கொருமலைக் கலரவற் கச்சம் புகுத்திவிளை யாடல் செய்யு - மங்கலங் தனிபெருகு சிங்கையம் பதிமருவு மயூரவா கனன் வருகவே, வானுடர் குடியேற மகவாதன் முடியேற வைத்தவே லவன் வருகவே, (க)

பண்டுபெர சிவனருள் படைத்துமென மால்வீணை பாடு நா ரதன்முன் முனிவர், பழமறைசொ லொருவேள்வி செய மனுப் பிறழ்தலிற் பானிறமு குந்தன் மேனி-மண்டுகரு நிற னெய்த வாட்டுநஞ் சேசெம்மை வாய்ந்தெனத் திரிம ருப்பும், வன்றுளு மேய்ந்தீழ வரைநடந் தென்னவரு வாண்மே ட நோக்கி முனிவ - ரண்டரு நடுங்கிப்பிர சிதமலை குறித்து வரு மமையமப யாத்த நல்கி, யாடலம் புயவீர னுய்ப்பவ தன் மீதேறி யகிலமுழு துங்க டாவு - வண்டுவரி கொண்டிடு கடம்பணி தடம்புய மயூரவா கனன் வருகவே, வானுடர் குடி யேற மகநாதன் முடியேற வைத்தசே வகன் வருகவே. (உ)

வேறு.

பாறு மோகப் பேரிருளிற் பைத்த மலவாய்ப் பட்டு நினைப், பன்னு ளிழந்தா யதன்மயமாய்ப் பரிந்தாய் வருந்தல் வாழிநமை - யாறு தகன்ற பூரணமென் றறிதி யறியின் மல மடங்கு, மகில விரிவு நம்மயமா வறிதற் கருளு மருட்கன் பும் - பேறு மிவையே சித்தாந்தம் பேசி ஸிருமை வினையொ ப்புப், பிறந்தாற் கலது கைகூடாப் பெற்றித் தாகு மென வெமையாள் - மாறு வளஞ்சேர் சிங்கைநகர் வடிவேற் குமரன் வருகவே, வானப் பிடிக்குங் குறப்பிடிக்கும் வாய்த்த களிறு வருகவே. (௩)

பிரம மொன்றே யுளசமுக்காம் பேசிற் சீவே சுரசகத் தும், பிரமம் லீலை யான்மாயை பெரிது கதுவப் பலகடத்து-மருவு மேக மதியேபோன் மன்னு மசர சரவடிவின், மலி

யுஞ் சடம்போம் வழிமதிபோம் வான மதியா யுடனீங்கப் - பொருவில் பிரம மெனவுயிர்கள் போத மெனவோ துவர் சிவ,போத வுரைப்பாற் பலரவர்பாற் புகன்மி னெனவும் புந்தியுறை - வரமன் புகழ்சேர் சிங்கை நகர் வடிவேற் குமரன் வருகவே, வானப் பிடிக்குங் குறப்பிடிக்கும் வாய்த்த களிறு வருகவே. (௪)

ஒன்றும் பிரம மமலநிலை யுறுமான் மாயை கதுவலெவ, னுற்றும் லீலை யெவர்காண்பா னுளரேற் காண்பா ரேக மெனல் - பொன்று நிற்குஞ் சிவன்முதற் புகனு மூன்று மித் தையெனிற், பொருந்து மறையா தியநூல்கள் புகன்ற தெ வர்க்கா முருவமிலாக் - குன்று ஞானப் பொருள்பலமெய் கூடி மயங்கித் தெளிதறகா, கூறு மிதனுன் முன்பின்முரண் கொள்ளு மினைய நெறிப்புகன்மின் - மன்று ணீரடிமையெ னும் வடிவேற் குமரன் வருகவே, வானப் பிடிக்குங் குறப் பிடிக்கும் வாய்த்த களிறு வருகவே. (௫)

கொங்கார்த் திரைக்கு மலர்க்குஞ்சி குலுங்க நுதலிற் சுட்டியொளி, கொழிப்பக் குழைபொற் குதம்பையொடு கொட்பத் தடந்தோண் மதியமுத - மங்கார்த் தெழலின் முக த்துவேர் வரும்ப வரும்பு மருணயனத், தழகு பெருகப் புயவலய மசைய வணிமார் பிடையாரந் - தங்காக் காலை யிர வியொளி சாட வரைஞாண் வில்விடப்பொற், றளிற் றண் டை சிலம்பொலிக டழைப்ப நிலமான் றவமவாய்ப்ப - மங் காப் புகழ்சேர் சிங்கைநகர் வடிவேற் குமரன் வருகவே, வா னப் பிடிக்குங் குறப்பிடிக்கும் வாய்த்த களிறு வருகவே. ()

தாழ்வார் வினைக்கட் டறுக்குமலர்ச் சரணன் வருக முரணுமலஞ், சாய்ப்போன் வருக மெய்ஞ்ஞானந் தருவோன் வருக வீடளிக்குங் - கோழ்வாரணத்தின் கொடியுயர்த்த கோமான் வருக காமர்பொலி,குழகன்வருக கடம்பணிதோட் குரிசில் வருக பரசமரர் - காழ்வான் றளையின் மூட்டறுத்த கடவுள் வருக செந்தழலிற், கதிர்ப்போன் வருக தமிழ்வேதங் கண்டோன் வருக தொண்டர்பெறும் - வாழ்வே வருக சிங்கைநகர் வடிவேற் குமரன் வருகவே, வானப் பிடிக்குங் குறப்பிடிக்கும் வாய்த்த களிறு வருகவே. (எ)

பொன்னே வருக மெய்ஞ்ஞானப் பொருளே வருக பொருண்மறைசொல், புத்தேள் வருக புத்தேளிர் பூமான் வருக பூமானு - ரன்னே வருக சுகமவுனத் தமுதே வருக குமுதவித, ழழகா வருக பழகுமறைக் கரியாய் வருக பரிவிலெனைக் - கன்னு ருரித்தாங் கடிமையெனக் கண்டாய் வருக கற்பகப்பூங், காவே வருக பாவிரதக் கனியே வருக தனியமல - மன்னே வருக சிங்கைநகர் வடிவேற் குமரன் வருகவே, வானப் பிடிக்குங் குறப்பிடிக்கும் வாய்த்த களிறு வருகவே.

வேறு.

அழகு முதிரு மிமைய முதல்வி யிளைய குமரன் வருகவே
யரியு மயனு மரிய மறையு மறிய வரியன் வருகவே
பொழியு மமுத கிரணன் மரபு நிலைசெய் வழுதி வருகவே
பொதிய மலையின் முனிவ னிதய மருவு குரவன் வருகவே
பழைய மறையை யரிய தமிழ்செய் பனுவல் விரகன் வருகவே
பரம சிவனெர் செவியையுதவ மறைசொல் கடவுள் வருகவே

மழலை யமுத மொழுகு கருணை வதனன் வருக வருகவே
மலையு மலையு மலையு மயிலன் வருக வருக வருகவே. (கூ)

தருண கிரண வருண சமுக சமக லொளியன் வருகவே
சமையர் பலரு மெமதெ னிலைமை தழுவு பிரமம் வருகவே
கருணை யொழுகு நயன கமல மதிய வதனன் வருகவே
கனக மலையி லமரர் பரவு பரம வுருவன் வருகவே
புராண நிலையி னகில முழுது நிறையு முதல்வன் வருகவே
புதுமை பழமை முதுமை யிளமை யொருவு கடவுள் வருக
மரண சனன வினைகொ லமுதவடிவன் வருக வருகவே [வே
மலையு மலையு மலையு மயிலன் வருக வருக வருகவே. (கூ0)

வருகைப்பருவம் முற்றிற்று.

## அம்புலிப்பருவம்.

மண்டலை யளிக்குமதி வள்ளலென வருதலான் மாமயின் மிசைத் தோன்றலால், வானூறு முகமலர் தரக்கதிர் பரப்பலான் மாவல்லி குழையு மாண்பா - லெண்டகு மிசைப்புலவர் களிகூர வருளமுத மெக்கால முந்தருதலா, லிமயநா யகிதழுவு மமலநா யகனரு ளிணங்குகட் பொறியாதலாற் - கண்டனைய மொழியாரன் மங்கையர் தனித்தனிக் கண்டணைத் துருகு மாண்பாற், காமரடி யார்கள்கைக் கமலங் குவித்தலாற் கந்தனினை யொத்துளானு - லண்டர்களி கொண்டுதொழு மண்டமர்செய் வேலனுட னம்புலீ யாடவாவே, யங்கனக மாடமலி சிங்கைநக ராளியுட னம்புலீ யாடவாவே. (க)

எண்ணிலா மதியையென வெவ்வெவரு மன்பா லிசைப்பரெ மருட்கு ருந்தை, யின்பமாங் குறமான் றழீஇயபடி வங்காட்டி யெவ்வுலகு மாரவைத்தான் - புண்ணியநின் மர புலகில் வாழையடி வாழையாய்ப் பொலியவொரு வழுதி யானுன், போதனைத் தினுமேன்மை யாயதவ முற்றவேம் புதனையம் புயமளைந்தான் - றண்ணிலவு வெண்ணீற்றர் செஞ்சடைக் காட்டிற் றவழ்ந்துனை யளைந்து நின்றான், றண் மதி நினக்கொப்பு வண்மைமலி திண்புயச் சண்முகனை யல்ல திலகா - ணண்ணலம் புகழ்மருவு திண்ணியவை வேலனுட னம்புலீ யாடவாவே, யங்கனக மாடமலி சிங்கைநக ராளி யுட னம்புலீ யாடவாவே. (உ)

மேதகு பொலஞ்சிகரி சூழவொரு தினமுற்றும் வேண் டுறு நினக்கெம் வடிவேல், வீரனுக் ககிலாண்ட கோடிசூழ் வருதற்கும் வேண்டா வரைக்க ணமுமே-பேதையறி வுடை யைநீ முற்றறி வியற்கையாப் பெற்றுடைய னெங்கள் பெரு மான், பெய்வளை யொருத்திமயல் வாரத்தி னுளுருப் பெரி துதேய் வுற்று ளாய்நீ - யேதமி லவன்கருணை சிறிதுபெற் றோர்சுகன்மு னெண்ணறு தவத்தர் மன்னே, விருளொ க்கு மிரவியெனி லெந்தையொப் பாதிநீ யெத்தவ முனைக்கூ யினு - னுதிநடு முடிவுரு வருக்குணமி கந்தவனொ டம்புலீ யாடவாவே, யங்கனக மாடமலி சிங்கைநக ராளியுட னம்புலீ யாடவாவே. (௩)

குருமதிநி னொளியிளங் கதிரொளிக் கெதிருறிற் குன் றுறுங் கோடிகோடி. கோகனக நாயகன் பேரொளி குமைக்

குமிக் குரிசிலருண் மேனியொளியே-பருவர லடைந்துடற் குறையரவு கவ்வப் பதைத்திடுதி நீயெமையன், பச்சைமயி லகவனுக் காயிரமு டித்தலைப் பாந்தள்வேந் தாவிசோரும் - பெருகுசய ரோகமொடு கூனுற்ற படிவுடைப் பேதைநீ யெ ங்கள்வள்ளல், பேசருமரோகவருள் வடிவுடைய ஞானப் பிழ ம்பாதல் காண்டியன்றே - யருவமா யுருவமா யருவுருவ மா னவனொ டம்புலீ யாடவாவே, யங்கனக மாடமலி சிங்கைநக ராளியுட னம்புலீ யாடவாவே. (௪)

வில்லென வளைந்தவு னுடற்கூனு மவ்வுடலின் மேவிப் பரந்தகறையு, மேயகய ரோகமு மொழிந்தனை மயவடிவ மேவலா மன்றியாசா - னில்லென நடுங்கலைநி னில்லாளின் வெஃகியவ ளின்னல நுகர்ந்ததீமை-யீண்டிவ னருட்கணேக் காலொழியி னன்றிவே றெஞ்ஞான்று மொழிதலிலைகா - ணல்லநல் லூர்ப்பெரு மணத்திலிரு வினையொப்பு நல்லாரும் வீடுபேறு, நண்ணியின் புறவைத்த வண்ணநன் கோர்திநின் னல்வினைப் பேறென்கொலோ - வல்லன்மலி பிறவிநோய்க் கருமருந் தானவனொ டம்புலீ யாடவாவே, யங்கனக மாட மலி சிங்கைநக ராளியுட னம்புலீ யாடவாவே. (௫)

தானே பொதுக்கடிந் தெண்டகைய மூவுலகு தன்னுணை செலநடத்துந், தபனியத்தருநிழற் செல்வன்வாழ்வோவலது சகதண்ட முற்றுமாக்கு-மீனேறு செங்கட் கருங்குழற் பை ந்தோகை மென்சாயல் வெண்சலசைதோய், வேதியன் செல் வமோ வெண்ணில்புவனத்துயிர்கண் மேதகக் காவல்புரியுந்-தேனேறு மின்சொற் றிருக்குமரி நாயகன் செல்வமோ வெ

வைவேண்டினுஞ், செஞ்செவே தஞ்சத் தளித்திடுமெம் வள்ளல்செய றேற்றிலாய் பிள்ளைமதிநீ - யானை றுயர்த்திட்ட வண்ணல்கான் முளையுட னம்புலீ யாடவாவே, யங்கனக மாடமலி சிங்கைநக ராளியுட னம்புலீ யாடவாவே. (௬)

வெள்ளைமதி யாகலினெம் வள்ளல்வரு கென்றசொல் வினவியும் வாராதிருத்தி,வேதகோடிகள்பலவு நாதனிவனைக் கருணை வெள்ளமென வுள்ளியேகொல் - கள்ளமன முடையசூர் பிள்ளையென வெந்தையைக் கட்டுரைத் திட்டவெஞ் சொற், காதேற மீதேறு மாடலம் புயமீளி கட்சிவப் பேறவசுரன் - பிள்ளையொடு மலகிலா வீரரைக் கொன்றுநகர் பேதித் தழித்தகாதை, பேசநீ கேட்டிலைகொ லெவ்வுயிரு முண்ணும் பெருங்கால னெண்ணிலஞ்சு-மள்ளிலைவை வேல்கொண்ட வாதியம் பகவனுட னம்புலீ யாடவாவே, யங்கனக மாடமலி சிங்கைநக ராளியுட னம்புலீ யாடவாவே. (எ)

மாறுகொடு நின்னையச் சூர்குழுவை மகவானை வாரிமீன் கொணரவைத்த, வாளசுர னேகந்த னேறிய மயிற்பரியவ் வான்கொடிச் சேவல்கண்டாய் - பாறுபடு கானெலாநின்குலச் சூர்புகாப் பஞ்சுபடு பாடுமேவப், பாரித்தெழுந்துளங் கோரித்த மேடமும் பணிதாங்கி நிற்றல்கண்டாய் - வீறுகொடு பணியாது வந்தித்த வேதனடி வெவ்விலங் கின்றழும்பு, வெள்ளைமதி கண்டிலைகொல் பிள்ளையிவன் முனியுமேல் வேறுதிக் கில்லைகண்டா-யாறுதிரு முகமுடைய வண்ணலங் குமரனுட னம்புலீ யாடவாவே, யங்கனக மாடமலி சிங்கைநக ராளியுட னம்புலீயாடவாவே. (அ)

வேறு.

ஆரண வேதபு ராணமு னூல்குரு வாலுணர் வுற்றுளையே
லாதி புராதன வேலுடை நாயக னுட னுறத்தெளிவாய்
பூரண னாரு ளுடினர் மான்முத லோர்கடை நிற்புறவும்
போதுதி யம்புலி யாடிட வென்றுத வப்பய னாறிவார்
காரண மீதுவெ ளிப்படு மேலெறி வெங்கண நாதர்நினைக்
காதி யரைக்குவர் கால்விர லான்மக னறிய வீரனெனு
வாரண வீரம யூரனொ டாடிட வாவம் புலிவாவே
வானவர் வாகினி கோனுட னுடிட வாவம் புலிவாவே. (௯)

திங்க ணினைத்தலை யோர்விரல் சுட்டி யழைக்கவும் வந்திலையத், தீமை குறித்திறை செற்ற மிகத்திறல் வாகுவை நோக்குறுமேற் - கங்கை முடித்தலை நாயக னேயிவண் வந்துரை யாடிடினுங், கந்தர் கணத்தரி டுந்தளை நீக்குக னுவெனு மெய்தரிதாற் - பங்கய முற்றவன் வெஞ்சிறை யிற்படு பான்மையும் வான்முகின்முன், பட்டது மோர்கில யெட்டுள திக்கிற் படரினு மரணிலையான் - மங்கலில் சிங்கையெம் வள்ளலொ டாடிட வாவம் புலிவாவே, வானவர் வாகினி கோனுட னுடிட வாவம் புலிவாவே. (௧0)

அம்புலிப்பருவ முற்றிற்று.

---

## சிற்றிற்பருவம்.

பூமா தவிநீ ழலிற்குதலைப் பொய்தன் மடவார் கைவருந்திப், புரிவா விழைத்த சிற்றிலெலாம் பொன்னுட் டாமங்

கையராடக் - காமாண் குலச்செம் மணியாங்குங் கதிர்நித்திலஞ்செய் செய்குன்றுங், கனகத் தியன்ற மாளிகையுங் கண்டு குடியேற் றியகருணைக் - கோமா னீயே யழித்தழித்துக் குறும்பு புரிதி கற்பகந்தற், குறுகு மவர்கொண் டிடவெட்டிக் கொடுக்கிற் றருவின் குறையாமோ-தேமா மணஞ்செய் சிங்கைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௧)

பொன்னம் பாவை தன்னைமடிப் பொருந்த விருத்தி யருந்துகெனப், பொதிநித் திலத்த சொன்றியிடும் பொய்தன் மகளிர் வண்டலிடை - மன்னன் புடையா ருளமேபோன் மதித்துப் புகுந்தா லடிகேளெம், வழிபா டேற்று மகிழ்வளித்தன் மாண்பே யன்றி மாற்றார்போற் - பின்னம் புரிந்தெஞ் சிற்றிலெல்லாம் பிரசு மலர்மென் சிற்றடியாற்,பேதித் திடுதலொப்புயர்வில் பெரியோய் நிலைமைக் கழகாமோ - தென்னம் பொழில்சூழ் சிங்கைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௨)

வேதச் சிரமன் றுயர்ஞான விளக்கங் கொளுவு மதியன்று, வெள்ளே றுயர்த்த கருமிடற்று விமல னமலப் புயமன்று - லோதற் கரிய பல்லுயிரு மொருங்கு பூத்து முதிராத, வொருத்தி யிருத்து மடித்தலமன் றெண்மென் மலர்மேலுறச்சிவக்கும்-பாதப் போது மிகவருந்தப் பற்றுச் சிறியேஞ் சிற்றின்மணிப், பருக்கை யுறுத்த நகாதடியேம்பயிற்றுந் தவமென் னீபடரச் - சீதப் புனலார் சிங்கைநகர்ச் செல்வா

சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (ரு)

வேட்டார்க் கெல்லா மழியாத வீடு கொடுக்கும் பரஞான, வெள்ள மெனவே வள்ளனினை விளம்பு மாற்ற மேயெளியேங் - கேட்டே மதற்கு மாறாகக் கெழீஇய வாயம் பரிந்துபுரி, கிளர்மா மணிப்பொற் சிற்றிலெலாங் கெடுக்குங் குறும்பே கண்டனமாற் - ருட்டா மரைகள் சேப்பூறுந் தன்மையறிந்தா லுலகின்ற, தாய்நெஞ் சுருகு மவளுருகச் சருவவுலகு முருகிடுமாற் - றீட்டோ வியஞ்சேர் சிங்கைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (ச)

எந்தா யடியே மெஞ்ஞான்று மெண்ணப் படுவ தாண்டானீ, யென்று மடிமை யாமென்ப திவையே யல்லாற் கருமமொழி - நந்தாப் போகம் பொருளெனவு நாட்டும் பிரமம் யாமெனவு, நடுங்கா துரைக்கு மிவர்முதலோர் நவிலு முறையை நயவேமாற் - கந்தா சலத்தாய் கைலேமலைக் கருணைக் கடறந் திடுமமுதே, கண்ணே கண்ணுட் கருமணியே கரிய மணியிற் பொலிபாவாய் - சிந்தா மணியே சிங்கைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (ரு)

வானாட் டவரு மகவானு மருவுஞ் சுவர்க்கத் தலனடைவான், மன்னுங் கமலா லயன்றிதிமுன் வழுத்து தொழில்விட் டுரித்தலைமை - தானாட் டுறுவான் போராழித் தடக்கை

முகில்புள் ளேறுயர்ப்பான், றுவில் சூரன் மகேந்திரப்பேர்த் தனிமா நகரை யழித்தமரர் - மேனாட் டேற்ற மலர்பெற்றாய் மிக்கோய் தமியேஞ் சிற்றிலெலாம், வீட்டிற் பயனே னினியார்ஞாற்றும் விரிந்த வலரும் விழைவாமோ - தேனாட் டயரும் பொழிற்சிங்கைச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

கொம்பிற் குயிலும் பசுங்கிளியுங் குறுகிப் பருகிக் களிதூங்கக், குதலைத் தீஞ்சொ லமுதமொழுக் குஞ்செங் கனிவாய்ப் பேதையர்கள் - பம்பிக் கரஞ்சேப் புறவருந்திப் பன்னா ளிழைத்த சிற்றிலெலாம், பனிக்குன் றளித்த பெருமாட்டி பரிந்து புரிந்த பேரண்ட - வின்பச் சிற்றி லழிந்தழித் தாட் டியற்று காலாந் தகன்கனற்க, ணெய்துங் குமரனென ரெழிலா லெவருந் தேற வழித்தனையாற்-செம்பொற் றலஞ் சேர் சிங்கைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எ)

கும்பஞ் சுமந்து நுடங்குமிடைக் கோக்குன் றளித்த பெருமாட்டி, கோலஞ் செறியு மடித்தலத்துங் கூடார் புரமுஞ் சமன்புரமு - மம்பஞ் சுமந்த மதன்புரமு மழித்த கடவு டிருப்புயத்து, மரிய மறையின் சேகரத்து மன்பரிதய மலர்த்தடத்துங் - கம்பஞ் சுமந்த வாளரியுங் காண்டற் கரிதா யாடல்புரி, கழற்சீ றடிகண் மணிப்பரலாற் கன்றிச் சிவத்தல் கடனன்றாற் - செம்பொன் சுமந்த சிங்கைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (அ)

போரே றேறும் மதம்பெருக்கும் புனிற்றுக் களிறே விவண்முடுகிப், போந்த தெனப்பார்த் துழியையன் பொம் மல் வதனப் பொலிவழகை - யாராமுகந்துண் டெம்மைமறந் தசைவற் றிருந்தே மன்றியெம, தடிகள் வரவை யறிந்துத ருக் கடைந்திங் கெழாமை யிருந்திலமாற் - பேரா வமுதப் பெருக்காறே பிறங்குஞ் சைவ மணிவிளக்கே, பின்னங் கட ந்த மனோலயமே பிணக்கற் றவர்கள் பெரும்பேறே - தேரார் வீதிச் சிங்கைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடிதோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௯)

காஞ்சிப் பதிபுக் குலகுய்யக் கருணை சுரந்தெண் ணுன் கறமுங், கண்ட கடவுட் டாய்குணநிற் கதுவிற் றன்றூற் கட் கனலால் - வாஞ்சித் துறுமா ருயிர்த்தொகையு மன்னும் பு வன கோடிகளு, மட்டித் தழிக்குந் தந்தைகுணம் வாய்த்த போலும் யவனர்புரி-நாஞ்சிற் பொலியு மதிற்பொறிக ணண் ணூர் நடுங்கிக் கண்மூட, நாட்டுஞ் சிலையிற் கணைபூட்டி நட க்க வெரீஇக்கற் பகக்காட்டிற் - றேஞ்சொற் கிளிபாய் சிங் கைநகர்ச் செல்வா சிற்றில் சிதையேலே, தெய்வப் பிடி தோய் மழகளிறு சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௧0)

சிற்றிற்பருவ முற்றிற்று.

---

## சிறுபறைப்பருவம்.

---

பையரவி னுயகனோ ராயிரப் பத்திப் பணமுடி பொறு த்த கடல்சூழ், பாருலகும் வானப் பரப்புமாங் காங்குப் பரா யசர வசர முற்றுந்-துய்யசெம் மேனிப் பரஞ்சுடர் வியாப

கஞ்சொற்ற மறை யுட்கருத்தைத், தோற்றத்தில் யாங்க ணுங் காட்டுமோ றென்னமலி சோலைகிரி மாந்தர் விருக-ஷமை ய்யவா னுலகும்ப ரைந்தருவெண் மாவெள்ளை யானைமுற் பொருள்கள் செம்மை, யாகநிறை பாலசூ ரியர்வட்கு சேய வொளி யகிலமெங்கும் பரப்புஞ்-செய்யமணி மாடமலி சிங் கையம் பதிமுருக சிறுபறை முழக்கி யருளே, தென்றமிழ்க் குறுமுனியை யன்றளித் திடுகுரவ சிறுபறை முழக்கி யரு ளே. (க)

கொங்கார் நறைக்கமல வாவியிற் பன்னிறங் கொண்ட நீர்ப் பூக்க ளாலுங், கோகனக மலராலும் வானந் துலாவருங் கொள்கையா லும்பிறங்கும் - கங்காரு நீருண்பு னிற்றுவி ஞலுநறை காலிதழி மலரினுலுங், காமர்கனி துதைகின்ற தருவாலு நவமணிகள் கஞலியிரு நிதிகள் கெழுமி - மங்காத காமதே னுவுமருவி யைந்தரு வனங்களு நிறைந்தகிர, வாரி யிற் பொன்னெரு மலர்த்தவி சிருந்தாங்கு மகரந்த மாடி மலர்மேற் - செங்கா லனந்தங்கு சிங்கையம் பதிமுருக சிறு பறை முழக்கி யருளே, தென்றமிழ்க் குறுமுனியை யன்ற ளித் திடுகுரவ சிறுபறை முழக்கி யருளே. (உ)

வண்டிரையு முண்டகத் தவிசிலுறை கலைவாணி மண வாள னெண்ணி யயர,வான்வளங் கூட்டுண மதித்திடுந் திண் டிறல்கொள் வாளவுண ராவிசோரப்-பண்டிறைவ னின்மு னிவு கொண்டகிர வுஞ்சப் பருப்பத மெனக் கிளர்ந்த, பன் னகமும் வெருவரச் சிங்கனெடு தாரகன் பட்டதுய ரெண் ணி யெண்ணி - யெண்டிசைய வேழக் குழாமுமிர ணியனூ

மிடந்தரா வரியு முட்க, வீடுபெறு சேடன்முத னுகரிறு திக்காரிடிக்குல மெனத் துடிப்பத் - தெண்டிரையு மலமரச் சிங்கையம் பதிமுருக சிறுபறை முழக்கி யருளே, தென்றமிழ்க் குறுமுனியை யன்றளித் திடுகுரவ சிறுபறை முழக்கி யருளே. (ங)

தோற்றிடு பதத்துமத் தமனகிரி யெய்தித் துதைந்திடு பதத்து மென்றுந், தொக்கசெந் நிறனொரீஇச் சுதைநில மரீஇயிரு சுடர்க்கடவு ளுங்கதிர்ப்ப - மேற்றிகழ் தருங்கரு முகிற்படல மும்பெரிய வெண்முகிற் படலமாக, விண்ணுடர் கோமகற் குரியவயி ராவதமும் வேகவெம் பரியுமென்ன - வேற்றமுற விம்பரிற் பொலிமதக் கரிகளொடு மெண்டகைய பரிகளாக, வேறுகடை வெள்ளம்வான் முகடுறக் கோத்தென விலங்கும்வெண் சுதைகு ழைத்துத் - தீற்றுமாடங்கள்பொலி சிங்கையம் பதிமுருக சிறுபறை முழக்கி யருளே, தென்றமிழ்க் குறுமுனியை யன்றளித் திடுகுரவ சிறுபறை முழக்கி யருளே. (ச)

மான்முழக் கிற்பொருவின் மாயைமுற் றோன்றலா மயிலகவ லுறுமுழக்கின், வள்ளனின் போர்ப்படை யெழுச்சியின் முழக்கினிறை வானவர்க டுதிமுழக்கிற் - கான்முழக் குங்கான் முழக்கெனப் பேராழி கண்படாப் புரிமுழக்கிற், கவிவாணருக்கெவ்வையு நல்குங் கொடைப்பறை கறங்குவா னிடிமுழக்கிற், றேன்முழக் கிற்கரு நிறத்தினிற் றெவ்வென்று தோய்முகிலை யிகன்முழக்கிற் - றொண்டர்கள் குழீஇப்பாவியண்டமுக டணவுறத் தோத்திரஞ் செயுமுழக்கிற் - றேன்

முழக் கம்பெருகு சிங்கையம் பதிமுருக சிறுபறை முழக்கி யருளே, தென்றமிழ்க் குறுமுனிவை யன்றளித் திடுகுரவ சிறுபறை முழக்கி யருளே. (ரு)

கண்ணகனெடும்புவி மடந்தையையோர் குடைநிழற் கவினவைத் தாடனேமி, கால்புகாத் தலையெலாஞ் செல்ல வொரு கோலோச்சு காவன்முசு குந்தனாதி - யெண்ணரு வரசர்களு முப்பத்து முக்கோடி யெனுமமரர் குழுவு முனிவ, ரெனையரும் பாதலத் தனையரும் போதன்மா லேனையரு முலகமீன்ற - தண்ணளி நிறைந்திடு மிமாசலையு மவள்பாற் றழைத்தபர சிவனுமகிழத், தந்திமா தைக்கைப் பிடித்த ஞான் றுறுகணத் தலைவர்கந் தருவர்கொட்டுந் - திண்ணிய முழக்கெனச் சிங்கையம் பதிமுருக சிறுபறை முழக்கி யருளே, தென்றமிழ்க் குறுமுனிவை யன்றளித் திடுகுரவ சிறுபறை முழக்கி யருளே. (சா)

மாமறை முழக்குமறை யந்தணர் மகத்தீ வலஞ்சுழித் தெழுமு ழக்கு, மன்கடவு ளர்க்கவி வழங்குறு முழக்குமவர் வருமூர்தி களின்முழக்குங் - காமர்வா னங்கட றடிந்துணு முழக்குமழை கான்றுகுமி றிடிமுழக்குங், காலாறு பாய்தரு மலர்க்கழி முழக்குமலி காலாறு பாய்முழக்குந் - தாமநீள் கழனிதொறு மள்ளர்க ளுழத்தியர் தனிக்குரவை யயர்முழக்குந், தாவில்புகழ் வண்மைசால் குடிகளெண் ணுன்கறந் தந்திடு முழக்குமுகமன் - றேமரு முழக்கமிகு சிங்கையம் பதிமுருக சிறுபறை முழக்கி யருளே, தென்றமிழ்க் குறுமுனிவை யன்றளித் திடுகுரவ சிறுபறை முழக்கி யருளே.

வேறு.

அழகுமி குத்தெழு கடல்பெரு குற்றென வருள்பொழி கட்கடை யுமையவடா, னகில வுயிர்க்குயி ரெனநில வுற்றிடு மமலவெ மெய்ச்சுத னமுதெனவே - மழலை யுவட்டெழு குதலை மொழிச்சிறு மதலையு ளுற்றிடு செயனிலையோ, மனனின் மதித்திட லரியதெ வர்க்கும மகிமை யுரைக்கென விறைமகிழாப் - பழைய னெமக்கன னியனிலை பெற்றிடு பதிவழி பட்டவர் கதிபெறவே; பதமலர் வைத்திருண் மலவலிக்கட்டருள் பதியவி டுக்குவ னுணர்கெனவே - மொழிய மலைக்கொடி மகிழ்வயி ரப்புய முருகன் முழக்குக சிறுபறையே, முதுமறை யைத்தமிழ் மொழியின் வடித்திடு முனிவன் முழக்குக சிறுபறையே. (அ)

சிந்தனை நைந்திடு மன்பர்ப வந்தெறுசிம்புள் முழக்குக சிறுபறையே, திண்டிறல் மொய்ம்பனு ளங்குடி கொண்டவிடங்கன் முழக்குக சிறுபறையே - சந்தத மும்பர வின்புசு ரந்திடு கொண்டல் முழக்குக சிறுபறையே, சங்கரி மங்கலை யம்பிகை தந்திடு கந்தன் முழக்குக சிறுபறையே-கந்தடு வெங்கரி சிங்கன டுங்கும டங்கன் முழக்குக சிறுபறையே, கங்கைகி டந்தநெ டுஞ்சடை யந்தணர் மைந்தன் முழக்குக சிறுபறையே - கொந்தலர் கொண்டக டம்பணி திண்புய வெந்தை முழக்குக சிறுபறையே, குஞ்சரி யுங்குற மங்கையு மின்புறு கொண்கன் முழக்குக சிறுபறையே. (கூ)

மூலமெ னக்குல மாமறை சொற்றிடு மோதன் முழக்குக சிறுபறையே, மூரி மலப்பகை சாடுமி ரத்தின தீப முழக்குக

சிறுபறையே - யாலமி டற்றொரு நால்வர் குருக்கட நாத முழக்குக சிறுபறையே, யாதியு மத்தியு மீறும கற்றிய சோதி முழக்குக சிறுபறையே - கால னடுக்குற வோலைவிடு த்தவ ராவி முழக்குக சிறுபறையே, காம ரருக்கர்கள் கோடியெ னப்பொலி போதன் முழக்குக சிறுபறையே - ஞால மளித்திடு நாயகி கட்பொலி பாவை முழக்குக சிறுபறையே, நான்மறை யைத்தமி ழாகவ ளித்திடு நாவன் முழக்குக சிறு பறையே. (கo)

சிறுபறைப்பருவ முற்றிற்று.

## சிறுதேர்ப்பருவம்.

பண்டோய் மொழிச்சுர மடந்தையர்கள் புன்றொழிற் பாடுவிட் டயர்வு யிர்ப்பப், பண்ணவர்க ளெண்ணிலர்கள் பாறெனப் புன்கான் பதுங்கலற் றுவகை கூற - வண்டேர் விழிப்புனற் கடைவெள்ள மென்னமுலை மலையருவி யாக வொழுக, வாழ்தரு மனைக்கடைத் தலைநின்று தங்கொண்கர் வரவசுரர் மாதர் நோக்கிப் - புண்டோய் நிணங்கமழும் வடிவேலு மாறிருபு யத்தழகு மாறு முகமும், பொருசிலைக் கோலமுங் கண்டுகுங் திசையெலாம் போதவுரு வெளியினோக்கத் - திண்டோர் கட்டாவிவரு சிங்கையம் பதியரசு சிறுதேருருட்டி யருளே, செம்பொனம் பலநடன நம்பரன் றருமுருக சிறுதே ருருட்டி யருளே. (க)

வெஞ்சிலைய வாழிவாய் விட்டெனப் பகுவாயை மென்றசனி யஞ்ச வார்த்து, விண்ணுடு கூட்டுண்ட செய்யகட்

காரவுண வெள்ளமிடி யேறு கேட்ட - நஞ்சிலகும் வாளெயி ற் றரவுமெண் காற்சாப நவிலொலிக் கஞ்சு மரியும், ராசகா ண் டீரவ வொலிக்கஞ்சு தந்திபு நாகநா யகன் வயிரவாண் - மிஞ்சுதாக் குக்கஞ்சு வெற்புமென வாவுபரி வெள்ளமொடு க ரிய நீல, வேழக் குழாமொடி ரதத்தொகையொ டழியநாண் மிக்கொலி யெழுப்பி யங்கைச் - செஞ்சிலை குழைத்திட்ட சி ங்கையம் பதியரசு சிறுதே ருருட்டி யருளே, செம்பொனம் பலநடன நம்பரன் றருமுருக சிறுதே ருருட்டி யருளே. ()

எண்ணிலா வவுணப் படைத்தலைவர் பேரொலி யெழுந் திடு பறந்த லைக்க, ணெண்டகைய மேருவிற் றண்டுகைக் கொண்டுமலை யென்னவம ராட வந்த - வொண்ணிலா வகிர ணைய பற்பூத நாதரெதி ருறுவதற் கஞ்சி யாவி, யொழிவத ற் கஞ்சியுட லூற்றுறுவ தற்கஞ்சி யும்பலொடு பரிகள் கரி யுங் - கண்ணிலாப் பிணமலை யிவர்ந்துதம் மெய்யெலாங் க ளேவரத் துறம றைத்துக், கரியரி முகந்தமக் குதவுமய னை ப்பெரிது கண்ணவம ராடி நின்ற - தெண்ணிலா மவுலிதரு சிங்கையம் பதியரசு சிறுதே ருருட்டி யருளே, செம்பொ னம் பலநடன நம்பரன் றருமுருக சிறுதே ருருட்டியருளே.

கள்ளமுளரித்தவிசி லுறைகின்ற நான்முகக் கடவுண் முன் கண்டு பின்னர்க், காமுற்ற தெய்வத் திலோத்தமை மு தற்பொருவில் கன்னியரை முன்னு மெழிலா - லெள்ளியெக் காலமுந் தன்னினத் தும்பர்களை யிமையாத கண்ண ராக்கி, யெரியிடைப் படுமெழுதி லுருகிட வுருக்கிடுமவ் வேழையர்க் கிடன தாகும் - வெள்ளிய மதிச்சிலை குயிற்றுமா டங்கள்

பலவிந்தமென மேலெழு தலால்,வெண்மதிய மப்பகை குறி த்தென வுருக்குற மெலிந்துருகி யுருகி வழியுங் - தெள்ளமு த வெள்ளமலி சிங்கையம் பதியரசு சிறுதே ருருட்டி யரு ளே, செம்பொனம் பலநடன நம்பரன் றருமுருக சிறுதே ருருட்டி யருளே. (ரு)

வானூறு பேரிருண் மடக்குங் கதிர்க்கடவுண் மண்ணுடு பதிக் கடவுளு, மாறாது படர்வழி யடைத்துவிற லெண்டி சைய மாக்களு நடுங்க வுலவை - கானூற நீட்டிவன் கான் மோத வாட்டுபு கறங்கிசைய வண்டர் பாடக், கனகத்தி யன் றபூந் துணர்களும் பசியமர கதமெனச் சிறிய பிஞ்சுங் - தீனூ று மாதனக் குலைவயெனப் பொற்கிளி செறித்தெனப் பல னு மல்கித், தெய்வவான் கற்பகஞ் சிறுபுதலி னுறவெழீஇத் தீங்கனி யுடைந்து பெருகுங் - தேனூறு சூதமலி சிங்கையம் பதியரசு சிறுதே ருருட்டி யருளே, செம்பொனம் பலநட ன நம்பரன் றருமுருக சிறுதே ருருட்டி யருளே. (கு)

வேறு.

மந்தர நட்டமு தம்பெறு தற்குமை கொண்க ரருட் பெற நினையாதே, வந்து கடற்றலை நின்று படப்பணி கொ ண்டு பிணித்திரு சிறைவானோர் - வெந்தறு கட்டிதி தந்திடு புத்திரர் நின்று மதித்திட வதுபோழ்தே, மீஞ்சி விடத்தழ ல் வந்து கொளுத்திட நொந்தசு ரர்க்கெதி ரருளாலே - முங் துவெண் மைப்படி வங்கரி யப்பரி விண்டு வழுத்துபு பிரவா ள, மொய்ம்புரு வைப்பெற வங்கது பொற்புற வெந்தை யு ருத்தரு திறலோனே - கந்தி மணத்திடு சிங்கை நகர்ப்பொ

லி கந்த னுருட்டுக சிறுதேரே, கண்டன சொற்சொல வெ ன்பை யழைத்திடு மெந்தை யுருட்டுக சிறுதேரே. (சு)

மாலுரை பெற்றழ காயபெயர்க் கொடி வானமு தக் கொடி யுடனேகா, வாழ்வின் மிகுத்திடு வாவி யியற்கரை மேவி யுளுற்றிடு தவமோரா - மேலுல கிற்சுவ ணபுரி யுற்ற வ னோர்மக ளிற்பொலி வாய்நீயம், மேதகு சொற்குயில் வேடர் பதிக்கொரு மான்வயி னுற்றடை வாணுமே - நீலவி டத்தெழு போரவு ணப்படை சூரொடு மட்டுல குயிர்வாழ் வா, னீண்மண முற்றுது மேகுகெ னச்சொலி நேரல ரைப் பொரு சமர்மோதாச் - சீலமி கச்சுர ரூரை யளித்திடு தீர னுருட்டுக சிறுதேரே, தேசிக மெய்ப்பொரு ளீசர்த மக்கரு டேவ னுருட்டுக சிறுதேரே. (எ)

வேறு.

கொன்னவில் வேலணி செங்கை விநோத னுருட்டுக சிறு தேரே, கும்ப மணிக்குய வம்பிகை பால னுருட்டுக சிறு தேரே - பொன்னக ராளி மடந்தை மணாள னுருட்டுக சிறு தேரே, புத்தமிர் தக்கட லுற்றெழு தாருவு ருட்டுக சிறு தேரே - கன்னவில் வேள்பலர் மேவெழி லாள னுருட்டுக சி றுதேரே, கஞ்ச னடுங்கவி னுவுக டாவ னுருட்டுக சிறுதே ரே - யொன்னல ராவியை யுண்டம டங்க னுருட்டுக சிறு தேரே, யுருவொடு மருவுரு வருவெனு மொருவ னுருட்டுக சிறுதேரே. (அ)

வேறு.

காரார் மிடற்றுப் புத்தேட்குக் கடவுண் மறையைப் பூ ம்னைமுன், கடாவு மறையைப் பன்மறையுங் கண்ட மறை

யைப் பேரின்ப - வாரா வமுதந் தருமறையை யனக னன கிக் காந்தரங்கத், தருளு மறையை மருளுமல மடக்கு ம றையைக் கடக்களிறுப் - பேராப் பிடியாய் நின்றுணையைப் பெற்ற மறையை யெம்மறைக்கும், பெரிய மறையைக் கு ழைச்சங்கு பிறங்குந் திருக்கா துறவைத்த - தீரா வளஞ்சே ர் சிங்கைநகர்ச் செல்வன் சிறுதே ருருட்டுகவே, செவ்வாய்க் கருங்கண் ணுமைமதலை செம்பொற் சிறுதே ருருட்டுகவே.

மெய்ம்மை மறைகள் வளர்ந்தோங்க வேள்விச் செல்வ நனிதழைப்ப, விண்ணாட் டவர்கள் விருந்தயர விரிந்த முகி ல்கள் பாந்துபெயப் - பொய்மை தீர்பல் வளஞ்சிறப்பப் பொ ருவி லறமு னொருநான்கும், பொலிய வுயர்சத் திநிபாதர் போதங் கொளுத்துஞ் சிவாகமநூ - றம்மை யொழித்து வீ ட்டின்பு தருநூ லெனக்கொண் டகங்களிப்பத், தாவி னீறு ங் கண்மணியுந் தகுமைந் தெழுத்துந் தமிழ்மறையுஞ் - செ ம்மை தழைப்பச் சிங்கைநகர்ச் செல்வன் சிறுதே ருருட்டு கவே, செவ்வாய்க் கருங்க ணுமைமதலை செம்பொற் சிறுதே ருருட்டுகவே. (க0)

சிறுதேர்ப்பருவ முற்றிற்று.

சுப்பிரமணியசுவாமி பிள்ளைத்தமிழ்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# சண்முகமாலை.



## காப்பு.

வெண்டா மரையாள் வியன்கணவன் மால்பரவுந்
தண்டா யுதபாணி சண்முகவேள் - பண்டவுண
மாமரம தட்ட வரதன் கவிக்கருளுங்
காமருநஞ் சித்திக் கரி.

## நூல்.

இமாசல மங்கை களிகூரும் வீரவெண் ணூர்க்கிடியாங்
குமார புராதன தத்துவ ரூப குகமுருக
நமா நம னுக்கு நடுங்காத வாழ்வு நயந்தருளுந்
தமாவுனை வந்தடைந் தேன்சிங்கை மாநகர்ச் சண்முகனே.

அல்லொரு கோடி பொருமலத் தார்ந்தது வாயுழல்யா
னெல்லொரு கோடியும் வட்குறு நின்னொளி யோடிணங்கித்
தொல்லொளி யெய்தித் துதைந்தின்ப மாருஞ் சுகந்தருவாய்
சல்லரி பேரிகை யார்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (உ)

பூட்டா மலத்தி லதுவது வாகிப் புலனிழந்தே
யாட்டா விளைஞர் விடுபம் பரத்தி னலமருவேன்
பாட்டா லிவனைப் பவரிலை யென்று பரிந்தருளித்
தாட்டா மரைதரு வாய்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (ஙு)

நந்தாத மோகச் சுழித்தலைப் பட்டு நடுநடுங்கிச்
சிந்தா குலமுற் றலைந்தே னினையன்றித் திக்கறியேன்
கந்தா கருணைக் கடலேநின் கண்ணரு ளாலடிக
டந்தா தரிக்கத் தகுஞ்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (ச)

பூதாதி காரிய மாய்ப்பிர பஞ்சமென் பொக்கமெல்லாங் [ன்
கோதா யொழியு மெனத்தெளிந் தென்று குறையொழிப்பே
மாதாவு மத்தனு மாருப் பிறந்தையை மாற்றுஞ்செஞ்சொற்
றூதாவு நீயல்ல வோசிங்கை மாநகர்ச் சண்முகனே. (ரு)

ஓடாவென் னெஞ்சம் புவனப் பரப்பெங்கு மோய்வுபெரு
வீடாத வெம்பவம் வீயா விருவினை வித்துலவா
வாடாச் சுகதுக்க நாயே னெளிமை மதித்துமலர்த்
தாடா தடங்கட லார்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (சா)

விண்ணளிக் குஞ்சுடர் வேற்படை யேந்தும் விடலையும்பொற்
கண்ணளித் தெம்மனக் கல்லையும் வேட்ட கடவுளுஞ்செம்
பண்ணளிக் குந்தமிழ் வேதமன் றோதும் பகவனுஞ்சீர்த்
தண்ணளிச் சாகர மாஞ்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (எ)

தத்து வமசிப் பொருடேர்கி லார்தண் ணருள்வலியா
லத்து விதத்தி னிலையுண ரார்புரி யாரரவா
மித்தைகொள் சீவன்முதன்மூன்று மென்பர்வெறியரந்தோ
சத்துவ மெய்ப்பொரு ளேசிங்கை மாநகர்ச் சண்முகனே. ()

நானென்று நீயென்று மையா மலமென்று நாட்டியென்னை
நானென் றெணுது மலமாய்க் கிடந்து நடுங்கவைத்தாய்

நானென் றெனைக்கண் டொழித்துன்னிற் காணு நலனளி ப்பாய், தானந் தவந்தழைக் குஞ்சிங்கை மாநகர்ச் சண் முகனே. (கூ)

விடங்காட்டும் வஞ்ச விழிகாட்டி வெம்முலை காட்டிய ல்குற், படங்காட்டு மாதர்க் கெனைக்காட்டி டாதுநின் பத்தி நெறித், திடங்காட்டி மெய்யன்பர் கூட்டமுங் காட்டித் திளை க்குமின்பத், தடங்காட்டி யாள்வதென் றோசிங்கை மாநகர்ச் சண்முகனே, (கூ0)

காணாத நின்னிலை காண்பா னினைகிலன் கைதவமே
பூணாகக் கொண்ட மடவார்கண் மோகப் புணரிவிழா
வாணாளை வீணிற் கழித்துழன் றேனின் மனமிரங்கித்
தாணாண் மலர்தரு வாய்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (கக)

வேதமு மாகம மும்முடி வொன்றென மெய்ம்மைபெற
வோதின ரத்துவி தப்பொருள் கண்ட வுறுவரவை
பேதமு டைத்தென வென்பசு ஞானியர் பேசுவர்பொற்
றூதவிர் மாட மலிசிங்கை மாநகர்ச் சண்முகனே, (கஉ)

விண்டாங்கு செஞ்சுடர் வேற்படை யேந்திய வீரவருட்
கண்டா னளித்துத் தமியனென் றுளக் கருதுதியோ
மண்டா தரவிலி யென்றெனைத் தள்ள மதிக்குதியோ
தண்டா மரைப்பதத் தாய்சிங்கை மாநகர்ச் சண்முகனே. ()

நாயே னறிவின்மை யுள்ளகங் காரமுன் னூடியெண்ணி
லாயே யனைய வாசே வெறுத்தஞ்ச லென்றிலையே

லோயா கடலைக் கொழிவுமுண் டோமக வோய்வுகண்டாற்
ருயா ரிரக்கந் தவாசிங்கை மாநகர்ச் சண்முகனே. (கச)

மானங் குலங்கல்வி யாசார மன்பு வணக்கமுயர்
மோனந் தவமுப் பொருணிலை காட்டி முதம்பெருக்கு
ஞானந் தருமன்பர் பேரவை போற்று நலனளிப்பாய்
தானந் தவந்தழைக் குஞ்சிங்கை மாநகர்ச் சண்முகனே. ()

ஐயா வடிமைக் கொருவர நல்குதி யாணவமாம் [லற்றே
பொய்யான மண்ணையைப் போக்கிச் சிறுதெய்வம் போற்ற
னைய்யா வுருகிநின் னன்பரைப் போற்று நலனுறவே
சைய்யா சலச்சிக ரச்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (கசு)

காணப் படுபொரு ளெல்லா மொடுங்குங் கருத்திலருட்
பூணப் படுநின் னுருவமொன் றேநித்த பூரணமென்
றேணுற் றனரடி யார்பலர் யான்கிடந் தேங்கனன்றோ
தாணுப் பிரான்மக வேசிங்கை மாநகர்ச் சண்முகனே. (கஎ)

நிற்பர மென்று நினையார்புன் றெய்வத்தி னேயம்வைத்தே
கற்பிழந் தோரிறை வன்றேடி தோட்டியைக் காமுறலிற்
பற்பல ரேத்துபு தீவாய் நிரயம் படர்வரென்னே
தற்பர சிற்பர னேசிங்கை மாநகர்ச் சண்முகனே. (கஅ)

மிக்கோ யுனையன்றி வேறுதெய் வங்களை மெய்யெனவே
மைக்கோ பலவுயி ரூன்களுக் கோமனம் வாஞ்சைவைத்துப்
பொய்க்கோலங் கொண்டுநின் பூதியும் பூசிப் புகுவரென்னே
தக்கோர் பழிக்கவந் தோசிங்கை மாநகர்ச் சண்முகனே. ()

வழிவழி யாயெங் குலதெய்வ மாய்வந்து வாய்த்தநினை
வழிபட லென்னப்புன் மார்க்கிகள் தேவையும் வாழ்த்தச்செ
வழிபடு வாரிவர்க் கென்னு மறலி வருங்கடையிற் [ன்று
றழைதெண் டிரைக்கட லார்சிங்கை மாநகர்ச் சண்முகனே.

குலனையெண் ணார்நின் குறிப்பையெண் ணார்கொத் தடிமையென்னு, நலனையெண் ணார்சைவ நன்மையெண் ணார்சிலர் நஞ்சனைய, கலதியர் புன்மத வைப்படைந் தேத்திக் கதியிழந்தே, சலமுறு வார்நம னூற்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (௨௧)

நன்மார்க்க முற்றும் பாதகண் டத்திடை நண்ணியும் வீண், டுன்மார்க்கப் புன்றெய்வஞ் சித்தி தருமெனச் சொல்லிச்சொல்லி, வன்மாற் கடலிடை வீழ்வா ரவர்தம் மடமையென்னே, சன்மார்க்கர்க் கேயருளுஞ்சிங்கை மாநகர்ச் சண்முகனே. (௨௨)

மிக்கோ யெறும்பு முதற்றேவ ரந்தம் விளங்குயிர்க
ளெக்கா லமுநின் னருளாற் றழைக்குறு மென்னுமறை
யக்கா ரணமறி யார்சிலர் புன்றெய்வ மாதரித்தே
தக்கார் வெறுக்கநிற் பார்சிங்கை மாநகர்ச் சண்முகனே. ()

எந்தையை யெந்தைக்கு முந்தையை யெந்தையை யீன்றவருட், டந்தையைத் தந்தைக் கனனிய மாய்நின்ற தாயைநங்க, ளெந்தமி லன்பரை யன்றிப் பொருளென யானினையேன், சந்தனங் காரகி லார்சிங்கை மாநகர்ச் சண்முகனே.

விண்ணீற தாமஞ்சு பூதமும் பூத விரிவுமன்றி
யெண்ணீடு தத்துவ புஞ்சமு மேவி யியக்குமருட்

கண்ணீடு ஞானக் கடலே யெனையென்று காத்திகொலோ
தண்ணீடு சாகரஞ் சூழ்சிங்கை மாநகர்ச் சண்முகனே.(௨௫)

போரணி கொண்டு பொருசூரன் வீழ்ந்து புலம்படையச்
சூரணி வேற்படை யோச்சுமெந் தாயுன் றுணையடிக்கே
நாரணி யென்னெஞ்சு நன்னெஞ்ச மான நலனறியேன்
றூரணி போற்றுங் கடற்சிங்கை மாநகர்ச் சண்முகனே. ()

நாயே னறிவற்ப நீயறி விக்கி னலனுறுநீண்
மாயா மலப்பகை யென்புன் னறிவையும் வாய்மடுத்து
வீயாத தன்மய மாக்குமெக் காலம் வினையொழித்துத்
தாயாய்வந் தாதரிப் பாய்சிங்கை மாநகர்ச் சண்முகனே. ()

பொல்லா தவருரை யக்கார நல்லவர் போதமெட்டி
நல்லா ரெனும்பெயர்ப் பொல்லார்கண் மோகமந் நாகரமு
தொல்லாவகந்தைக்குருவென்ப தென்னுருவுய்வன்கொலோ
சல்லாப துல்லிய னேசிங்கை மாநகர்ச் சண்முகனே. (௨அ)

ஆரு றகன்றமெய் யானந்த னேயுன் னருளையன்றிப்
பேரு யொருபொரு ளுண்டுகொ லோபிறர்ப் பேணுவரேன்
மாருத வெம்பவ மாறுங்கொ லோவென் மடமையந்தோ
சாரும் வீதி பொலிசிங்கை மாநகர்ச் சண்முகனே. (௨௯)

ஆனுப் பிறந்தையி லுற்றுழல் சீவர்க் கருள்சுரந்து
மேனுட் டொடரும் வினையொப்பு நோக்கி விழியளித்து
மானுக் கொடிய மலத்தைத் திரித்து மனந்திரித்துத்
தானுக்கி யன்பளிப் போன்சிங்கை மாநகர்ச் சண்முகனே.

சண்முகமாலை முற்றிற்று.

---

சிவமயம்.

# சுப்பிரமணியசுவாமி பதிகம்.



## காப்பு.

ஆரணம் பரவுஞ் சிங்கைக் காதிபன் வடிவேற் செங்கைக்
காரண னுலக மீன்ற கன்னிதன் னிளைய தோன்றல்
பூரண னாகி நின்றோன் புகழுரைத் திடுமென் புன்சொல்
வாரண முகத்துப் புத்தே ளருளினான் மாண்பிற் றுமால்.

## நூல்.

திரும டந்தையும் வெள்ளைக் கமலத்துச் செல்வி யுந் தொழுஞ் செம்பொ னிமயத்தி, லொரும டந்தை யிருவிழிக் குண்மணி யொத்தி லங்கிய புத்தமு தேசசி, தரும டந்தை குறமடந் தைக்கொரு தலைவ நின்னைச் சரணடைந் தேனி யான், விரிம டங்கெடுத் தாள்சிங்கை மாநகர் வெற்றி வேற் படை முற்றருள் வள்ளலே. (க)

என்ன தென்றுமி யானென்று மெண்ணியே யீட்டி வைத்த வினைப்பெருக் காவியா, னின்ன தென் றுநீ யென்று நினைகிலே னீச னேனெனக் குய்வுமுண் டாங்கொலோ, தன்னை யொப்புயர் வின்றிநின் றோய்நினைச் சரண டைந்த னன் சார்புமற் றொன்றிலேன், மின்ன றுன்சிக ரிச்சிங்கை மாநகர் வெற்றி வேற்படை முற்றருள் வள்ளலே. (உ)

புத்த ராதி யருகந்தக் சையர்கள் புன்ம தங்களைச் சாடிநின் பூதியு, மெத்து மைந்தெழுத் தும்மறை வாய்மையு மிக்க கண்டிகை யும்விரித் தோயுன்றன், பத்தி யாலன்றி வீட்டைக் கருதுவோர் பார வாரிகை யாற்கடப் பேமெனு, மித்தை யாவரன் ஞேசிங்கை மாநகர் வெற்றி வேற்படை முற்றருள் வள்ளலே. (ரு)

ஐய நின்னை யரணென் றடைந்தன ருரு மின்றெனக் கோருமுன் னுள்ளமே, கையனேன்குற்றங் கண்ணுதி யேற் பெருங் கணித ரெண்ணுங் கணக்கி லடங்குரு, வுய்ய வேறு வழியிலை தாய்நல னுண்டு தாதையைக் கொன்றவ னுக்க ருண், மெய்யர் பாலக னேசிங்கை மாநகர் வெற்றி வேற்ப டை முற்றருள் வ்ள்ளலே, (சு)

வான நாதன் மணித்தவி சேறினு மாணி லாநிர யத் திடை மாழ்கினுந், தேனு லாமுன தாரு ளெண்ணுமத் திற ம லாது சிறுதெய்வம் போற்றலே, ஞானு லாமுயி ருக்குயி ராகிய வும்பர் நாயக னேயுமை தோன்றலே, மேனி லாவு புகழ்ச்சிங்கை மாநகர் வெற்றி வேற்படை முற்றருள் வள் ளலே. (எ)

தண்ணந் தாமரை மேவி யுலகரு டாதை யுந்தடு மாற க்க டாவுசொல், வண்ணஞ் சேர்மல யத்துறை மாதவ வள்ள லார்க்கு வழங்குமெய்த் தோன்றலே, யெண்ணங் கண்டுயிர் யாவையும் போற்றுறு மெந்தை யேயெனை யெங்ஙனங் காக் குதி, விண்ணம் போற்றும் புகழ்ச்சிங்கை மாநகர் வெற்றி வேற்படை முற்றருள் வள்ளலே. (எ)

காதை நாடி நடந்திடுங் கண்ணியர் காம சாகரத் தாழ்ந்து கரைபெறா, தாத னாகி யலையுமென் னேழைமை யண்ணலேமதித் தாளத் தகுங்கண்டாய், தீது நன்றென் கிலாயளித் தாயெனச் செம்ம னின்னைச் செயிர்ப்பவர் சீவரோ, வேத நாயக னேசிங்கை மாநகர் வெற்றி வேற்படை முற்றருள் வள்ளலே. (எ)

கள்ள நெஞ்சிற் கபட மளந்திடக் கத்த நின்னன்றி யார்க்குங்கை கூடுறா, வள்ளல் வெம்பிற விக்கட லேறுமோரவதி யின்றி யலைந்தே னகிலமும்,பிள்ளை நிற்கெனு மாமறையானுமப் பெற்றி யேனென் பிழைபொறுத் தாளுவாய், விள்ள ரும்புக ழார்சிங்கை மாநகர் வெற்றி வேற்படை முற்றருள் வள்ளலே. (அ)

ஆன னங்களொ ராறுடை யண்ணலே யய்ய னேயமுதேயுனை யன்றியே, யீன நின்ற பிறந்தை மரணமென் றிருமை யுற்றுழல் தேவரை யெண்ணலேன், ஞான நின்றநின் றொண்ட ரவைதொழு நற்ற வப்பய னென்றெனக் காக்குவாய், மீன வண்கொடி யாய்சிங்கை மாநகர் வெற்றி வேற்படை முற்றருள் வள்ளலே. (௯)

பொய்யெ னாத புகார்வணி கர்க்கெலாம் போற்று நற்குல தெய்வம தாகியே, செய்ய மாமலர்ச் செல்விதன் னேக்கமுஞ் சீர்த்தி யும்பெருஞ் செல்வமு நல்லற, வைப வங்களு நாளும் பெருகிடவைத்த பேரரு ளென்று மறக்கலேன், வெய்யர் காணரி தாஞ்சிங்கை மாநகர் வெற்றி வேற்படை முற்றருள் வள்ளலே. (௧0)

சுப்பிரமணியசுவாமி பதிகம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# அங்கயற்கண்ணிமாலை.

காப்பு - வெண்பா.

தன்னிகரில் சிங்கைத் தலைவிநங்க ளங்கயற்க
ணன்னை தமிழ்ப்பா வமைவுறவே—யுன்னுவாம்
பத்திவி னாயகந்தீர் பாவலரை யாவலுறுஞ்
சித்திவி நாயகன்றன் சீர்.

## நூல்.

இகமகிழ் தந்தியை யாறிரு நோக்கத் திளங்குருந்தை
மகவெனத் தந்தும்ப ராதிய ரின்னலை மாற்றியநின்
றகைமையை முற்று முணரா மறையுந் தயங்குமென்னே
ககனமுன் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே.(க)

பெற்று யுலகத் துயிரையெல் லாமந்தப் பெற்றியினு
னற்று யுனையன்றி வேறுள ரோநன் னெறியொருவிப்
பற்றேது மின்றிப் பரதவிப் பேனைக்கண் பார்த்தருள்வாய்
கற்றோர்மன் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

பொன்னே மரகத மாமலை யேபுவ னங்கடந்த
வன்னே யருட்கொண்ட லேதமி யேனகந் தைக்கடற்குட்
கொன்னே கிடந்து தடுமாற வோவென் குறித்தணைபொற்
கன்னீடு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (ங)

*

எல்லா வுயிருமற் றன்னேநின் சந்ததி யேயவையுட்
பொல்லாத யானுமொன் ரேபுற மோபுற மன்றெனிலெ
னெல்லா வறிவிலி யாக்கினே யானெவ னுய்வனறுங்
கல்லாரச் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (ச)

பெண்ணே யிமயப் பிடியே களிறொன் றைப் பெற்றெடுத்த, பண்ணேயு மின்சொற் பசுமயி லேயுனேப் பாடியுய்ய, வெண்ணேன்புன் மாதரை யெண்ணி விழலுக் கிறைத்தனனென், கண்ணேயுஞ் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (ரு)

ஆனந்த மாகி யறிவாகி யாருயிர்க் கோருயிராய்க்
கானந்து நீரழன் மண்காய மாகிக் கதிர்மதியாப்
பானந்து மாருயி ராமுன் னிலேமை பகரவற்ரே
கானந்து சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (சு)

நல்லா ரிணக்கமென் றெந்தைவெண் காடர் நவின்றவழி, நில்லா துழலு மறிவிலி யாயினு நின்னேயன்றி, யொல்லாத தேவரை யோர்பொரு ளாமென் றுணர்த்தும்புன்னூல், கல்லேன்றென் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே.()

பொற்போது கொண்டுநின் பொன்னடிப் போதிலெப் போதுமன்பாய்த், தற்போத மற்றிரண் டற்றுநின் னேடு தயங்குமந்தச், சிற்போத மெய்தவென் றர்ச்சிப்ப னேசெம் பொன் மாடமெங்குங்,கற்பேறு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (அ)

எத்தனை கோடியென் றெண்ணவொண் ணுப்பவமெய்
தியெய்தி, யத்தனை காலமு மாயாவி காரத் ததுவதுவாய்ப்,
பித்தனின் மாழ்கிக் கிடந்தே னெனக்குன்றன் பேரருளே,
கத்தறு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (௯)

பாலே யனைய மொழியார்கண் மோகப் படுகுழியிற்
கோலே யிழந்த குருடனில் வீழ்ந்து குலையுமென்றன்
மாலே யகற்றிநின் றொண்டரிற் கூட்ட மதித்திபுனற்
காலேயுஞ் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

டஞ்சொத்த பாதமென் னெஞ்சக்கன் மீதுறல் பாங்கன்
றெனில், விஞ்சைக் கணவர் மணப்பந்த ரிற்கன் மிசையும்
வைத்தார், கொஞ்சப் பழக்கமன் றேசிலை யாகுங் குடியிரு
ப்பே, கஞ்சப்பொற் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்
மையே. (௧௧)

தேமரு கொன்றைச் சடையா னிடத்திற் றிகழும்பச்சை
மாமயி லேயென்றன் குற்றங் குணத்தின் மதித்திலையே
லேமுறு வேனெனை யேன்றுகொள் வார்பிற ரின்றுகண்டாய்
காமரு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (௧௨)

வஞ்சகங் கோடி யரும்பி யகந்தை மலர்ந்துகொடு
நஞ்சகம் போலும்பொய் காய்த்து வினைப்பழ நாளுமல்கு
நெஞ்சக நச்சு மரம்படைத் தேற்கொர் நிலையுமுண்டோ
கஞ்சமன் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

காலாந்த காரத் தினுமிருள் வெம்மலக் கட்டவிழ்க்க
மேலாந் தகரவித் தைக்குட் டிகழுநின் மென்மலர்த்தா

ஞாலாய்ந் துரைக்கு நெறியருச் சித்திடு வோன்மைதந்தாள்
காலார்ந்தசிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே.(கச)

வேத மனந்த முறைமுறை யிட்டும் விராவருநின்
பாத மலத்தி லதுவது வாகிப் பரிந்திடுமிப்
பேதை முடவன் மலைத்தேன் விழைதலிற் பெட்டுநின்றேன்
காதல்செய் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

கோடுற்ற மாலிம யாசல மீன்ற குமரியுனைப்
பாடுற்ற கந்தை படுத்தின்ப வாரி படரவெண்ணேன்
பீடற்ற மோகத் தலைத்துரும் பாயினன் பேசுசந்தக்
காடுற்ற சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (கசு)

பசுபதி யாகிய நின்பதி யோடுமென் பாறைநெஞ்சுஞ்,
சுசிபெறத் தோன்றி யகந்தைக் குறும்பைத் தொலைப்பதெ
ன்றோ,விசுவமு மீன்று முதிரா விளங்கிழை மென்கொடியே
கசமலி சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (கஎ)

ஆரா வமுதத் தடங்கட லூற்றிருந் தாங்கருளே
பூராய மாயென்று மோவா தொழுகும் புதுமலர்க்கட்
சீரா ரிமயப் பசும்பிடி நீசிந்தை காடெனக்கே
காராருஞ் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

அண்டங் குலைய வருநஞ்சம் வாரி யருந்தியுநின்
மண்டுங் கனிபிதழ்த் தெள்ளமு தார்ந்து மணிமிடற்றெம்
மெண்டங்கு செல்வ ரெக்காலமு நித்த ரெனவிருந்தார்
கண்டங்கு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

நின்னும மோத நினேயேன்புன் மாதரை நேசித்தவர்
தன்னும மோதித் தருக்குறு வேன்சண்ட ஞவியுண்ட
பொன்ஞர் மவுலிக் கினியா யமரிற் பொருதவிந்தோர்
கன்னீடு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே.(௨0)

புள்ளேறு வேற்கைக் கடுங்கட் கொடுஞ்சமன் போதருகால்
வெள்ளே றுகைத்து வரவேண்டு வன்முக்கண் வேதியனும்
வள்ளேறு வேற்கைக் குழவியு நீயு மலர்ப்பொழில்வாய்க்
கள்ளேறு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

எக்கால மேழை வினேயறுங் கால மிரங்கியன்னே
யெக்கால மின்னருள் செய்திடுங் காலமற் றெப்பொருளு
மெக்கால நின்மய மாய்த்தோன் றுங் கால மியம்பெவருங்
கைக்காத சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

பாலே யனேய மொழியாலு மேழையர் பாழிமதன்
கோலே யனேய விழியாலு மாவி குலேந்துமுழு
மாலே யிவனெனக் கண்டோர் பழிக்க வருத்தனேபூங்
காலேயு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே.(௨௩)

மந்தாகி னிச்சடை வள்ளலு நீயு மகிழ்ந்தடியேன்
சிந்தாச னத்துற் றிளஞ்சேயொ டாடித் திளேப்பதென்றோ
நந்தாத ஞானக் கொழுஞ்சுட ரேமத நாறிபஞ்சேர்
கந்தாருஞ் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

நாயே னறிவின்மை யென்சொல்லு வேனென்னே நாடிவருஞ்
சாயா விறலுடை யந்தக னுட றடுக்கவற்றே

பேயே னெனக்கடி யேலன்பர் கோடி பிழைத்திடினுங்
காயாத சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே (உரு)

நான்முத லென்றுமென் ஞற்றலை மாற்றி நலியுமலந்
தான்முத லென்றுரை யாதிரண் டற்றுனைச் சார்ந்தருளெம்
மான்முத லென்றுணர்ந் தானந்த வாரி மடுப்பவருள்
கான்முதிர் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

சிந்தைத் தடத்திற் கிளைத்தரு ளானந்தத் தேன்றதும்புன்
கந்தக் கமல மலர்த்தா ளிணையுங் கதிர்முகமு
மெந்தப் பொழுது மறவாத வாழ்வெமக் கெய்துங்கொலோ
கந்திப்பொற் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே.()

பூரணி சீரணி வாரணி கொங்கைப் பொருப்பிரண்டா
லேரணி நூலி னிடையணங் காநிற்க வெந்தைவெற்பிற்
போரணி காட்டி மணவணி பூட்டும் புதுமையென்னே
காரணி சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே.(உஅ)

வெற்பமை செம்பொற் சிலையுநின் கொண்கர் வியன்புயத்தி,னற்பமை வண்ணமுஞ் செங்கைக்குங் கொங்கைக்கு மாற்றலற, வொற்கமி லுள்ளமுங் காமக் கனலி னுருகவைத்த, கற்பிதென் சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. ()

நானீ யெனும்பிணக் கற்றிட வுற்றெதிர் நன்றருள்வாய்
தானே தரும்புஞ் சலியா தெனுமறை சாற்றும்புன்சொ
லானுனு மென்சொனு நின்னன்றி யாவதன் றாதரிப்பாய்
கானீடு சிங்கைப் பதிவாழு மங்கயற் கண்ணம்மையே. (௩௦)

அங்கயற்கண்ணிமாலை முற்றிற்று.

---

சிவமயம்.

சுந்தரேசர்

# திருவிரட்டைமணிமாலை.

## காப்பு-வெண்பா.

பொன்னு மணியும் பொலிசிங்கைச் சொக்கருக்கு
மன்னு மிரட்டைமணி மாலைசொல—வென்னெஞ்சக்
கல்லேறிப் பெய்யுங் கருணைமழை நங்கள்சித்தி
வில்லேறு வேழம் விழைந்து.

## நூல்.

பொன்னங் கடுக்கைப் புரிசடையுங் கண்மூன்றுங்
கன்னங் கரியமணி கண்டமும்பா—லன்னையுரு
மூழ்வடிவு மெண்ணியெண்ணி யுள்ளத் தருள்பெருக
வாழ்வடையு மாலிந்த மண். (௧)

மண்ணாதி யைந்து மியமானன் ஞாயிறு மாமதியு
மெண்ணாரு மெட்டுரு வாயே யிரண்டுல கும்புரக்கும்
பண்ணா ரிசையி னுமையொடு மேய பகவவருட்
கண்ணா ரருட்கட லேயெனை யாளக் கடனுனக்கே. (௨)

உனக்கே யடிமை யுடையானீ யென்னு
மெனக்கே தவம்பலித்த தெந்தாய்—கனக்கரிய

கண்டத்தா யெண்டோளா யண்டமெலாங் கண்டமுனி
முண்டத்தாய் முண்டகத்தா ளாய். (ங)

தாளா தரிக்குந் தவந்தந்த வாவென்கொல் சாற்றுவல்வா
ளுளா தரிக்கு மறிவிலி கைதவ நாட்டமின்றிக்
கோளா தரிக்குந் தவமறி யாத குமதியெற்கும்
வாளா தரிக்குஞ்சிங் கைச்சோம சுந்தர மாமணியே. (ச)

மணியே மணியொளியே வாழ்வெமக்கு நல்கும்
பணியேயு மோலிப் பரனே—பணியேன்மற்
றுன்னடிமை யாகி யுனையடிமை யாக்குமன்பர்
பொன்னடியென் னெஞ்சிற் புதைத்து. (ரு)

புத்தமு தக்கரு ணைக்கட லாடப் புகுமின்சிங்கை
முத்த முறுவற் றுவரிதழ்ச் சேற்கண் முதல்விதமூஉ
மத்து விதப்பொரு ளாஞ்சுந்த ரேச ரடிக்கமல
நத்தனு நாண நனியன்பி னாடி நமரங்களே. (சா)

நமரங்காள் சிங்கைவம்பி னங்கள்சொக்க லிங்கர்
தமராகி வாழத் தவஞ்செய் - தவமொழிமின்
கண்டங் கறுக்குமிரு கண்மூன்று மோரிருதோ
ளெண்டோளாம் வெண்டலையு மே. (எ)

வெண்டாரங் கத்தில் விழிதுயில் வானும் விரிஞ்சனுமுன்
கண்டறி யாத கழற்சீ றடியுங் கதிர்முடியும்
ப்ண்டறிந் தன்று பாவைதன் வாயிற் படிகளெந்தை [னே.
தொண்டர்தஞ் சீர்த்தி யுரையள வோசிங்கைச் சொக்கைய

சொக்கலிங்க மென்றெண்ணுய் தோன்ற லவன்சுவண
நக்கலிங்க னெண்ணுத்தா னுடுகிலாய்—மிக்க
நலனுருஞ் சிங்கை நயவாயென் னெஞ்சே
மலமாயை யென்றொருவு வாய். (கூ)

வாய்த்தன்று நின்கழற் சீறடி யேத்துறும் வாழ்வுமதி
தேய்த்தன்று மாமக னூறிய சேவக சிங்கையெந்தாய்
* செய்த்தன் றணிமை யருளிவற் கென்னத் திரியுமுழுப்
பேய்த்தன்மை யேற்கு மருளுரு வாகிய பிஞ்ஞகனே. (க0)

பிஞ்ஞகனே சிங்கைப் பெருமானே வானடுங்கு
மைஞ்ஞிமிருங் கண்டத்து மாமணியே—பொஞ்ஞிமிரு
மெய்யேமெய் யென்ன விழலுக்கு நீரிறைத்தாங்
கய்யோ வலைந்தே னருள். (கக)

அருட்கட லேசிங்கை மாநகர் மேய வறக்கடலே
தெருட்கட லேசின் மயக்கட லேயெங்கள் சேல்விழிதாய்
மருட்கட றீரமுன் னேழ்கடல் கூய்த்தந்த மாக்கடலே
கருக்கட றீரப் பணிப்பாய் நின்னன்றிக் கதியிலனே. (கஉ)

கதிக்குத் துணையடிகள் கான்மலரே யேத்துந்
துதிக்குத் துணைதொல் புகழே—மதிக்குக்
குறைதீர்த்த சிங்கைக் குரிசிலே யஞ்சேன்
விறலரிக்கும் வெல்லப் படா. (கங)

வெல்லத் தகும்பவ வித்தாகும் வெவ்வினைத் தெவ்வை
யன்பு, புல்லத் தகுமின்பு கொள்ளத் தகும்பவம் போக்கத்த

* அணிமையன்று செய்த்து என மாற்றிப் பொருள்கொள்க.

குந், தில்லைப் பிரான்சிங்கைச் சொக்கேசன் சீறடி செய்யநெ
ஞ்சே, யொல்லைத் தெளிந்தகந் தைப்பேயை யோட்டிநின்
றுள்கிடினே. (௧௪)

உள்ளத் திருக்கு மொருகோடி வஞ்சனையுங்
கள்ளத் திருக்குமலக் கற்பனையு-மெள்ளிவிட
வென்றுவந்து நல்கு மெழிற்சிங்கைச் சொக்கேசன்
றன்றுலங்கு மானந்தத் தாள். (௧௫)

ஆனந்த கானத் தகிலேச தென்கம லைக்கதிப
வானந்த மாநடஞ் செய்தில்லை வாண வணிமதுரை
மீனந் தரித்த கொடிக்கொடி நாயக வெவ்வினையே
னூனந் தரித்த பவக்கடல் போக்குவ துன்கடனே. (௧௬)

கடனஞ் சமுதாக்கிக் காமரயன் மாயன்
மடவா ரமங்கலத்தை மாற்றுந்—திடனறிந்து
பேசும் பலபதிநூல் பேதையராய்ச் சிங்கையெந்தா
யேசுவரா வஞ்சலரீ தென். (௧௭)

என்னை யிழந்திழந் தெத்தனை யோபவ மெய்திமலந்
தன்னி லதுவது வாய்க்கிடந் தைய தளர்வடைந்தே
னன்னை யிழந்தசேய் சேய்போ லருட்டந்தை தாயெனநின்
றன்னை யுணர்ந்துய்யு நாளுமுண் டோசிங்கைத் தற்பரனே.

தற்பரனே பொற்பரனே தாயேதா யில்லானே
சிற்பரனே யற்புதனே சிங்கையெந்தாய்—கற்பனைசேர்
மெய்யனைத்தும் பொய்யாக மெய்யாக நின்னையுணர்ந்
துய்யுநா ளுண்டோ வுரை. (௧௯)

உரையால் வழுத்தியு முள்ளத் திருக்கற் றுணர்ந்துமெய்யன்
புரையா தரித்தும் பதிநூலி னின்று மமைந்தவர்க்காந்
தரையா தரிக்குஞ்சிங் கைச்சோம சுந்தரன் றண்ணளியும்
புரையாத கல்வியுஞ் செல்வமு ஞானப் பொருளுமன்றே.

சுந்தரேசர் திருவிரட்டைமணிமாலை.

முற்றிற்று.

---

சிவமயம்.

# அனுகூலவிநாயகர்மாலை.

காப்பு-வெண்பா.

அனுமயனுஞ் சிங்கைக் கதிபனனு கூல
வினயகன்பா மாலை விளங்கத்—தனுதருளே
மெய்த்துணைய தாமன்றி வேறு துணைமிகையா
மெத்துணைநா ளுமெண்ணி னும்.

நூல்.

திருவாருங் கல்வியுஞ் செல்வமு மன்றற் றிருந்துகற்பி
னுருவார் துணையுநன் மக்களு மாயுளு மோங்கவும்பர்
மருவார் வளங்களுந் துய்ப்பித்து மேலின்ப வாழ்வுநல்கும்
விரிவாருஞ் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (க)

என்னை யுலக மறியா துழல்வன வெங்கையருள்
புன்னீர்மைக் கொண்டொரு கால்வழி பாடு புரிந்திடினுந்
தன்னே ரிலாதமெய் யானந்த நல்குந் தகையறிந்தும்
வின்னீடு சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உ)

அன்னையென் னுருயிர்க் கோருயி ராகிய வையவந்தோ
கொன்னே மடந்தையர் மோகா டவிக்குட் குழித்துழன்றே
னென்னேயென் னேழமை யெண்ணு விரங்கலை யென்னினு
மின்னீ டுசிங்கைப் பதியனு கூல விநாயகனே. [ய்யேன்

கத்தக வீணக் கடையரைக் கூடிவெங் காமவெம்மை
முத்தகு மாசைப் பெருக்கூ டலையு முழுமகனென்
றத்தக லாத கடையேனை யென்னலை யாண்டருள்வாய்
வித்தக சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (ச)

ஆணவ மாயை கொடுங்கான் மியமலத் தாலறிவு
பூணவ மார்க்கத் துழல விழுந்தெனைப் போதமற்றே
காணரி தாயநின் றொண்டர்குற் றேவல் கருதுகிலேன்
வீணனென் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (ரு)

புண்ணிய பாவ மிருபொரு ளோநமன் போர்வயவர்
நண்ணி யடர்த்துக் கொடுபோது மன்று நயந்துதவு
மெண்ணிய சுற்றமுஞ் செல்வமுஞ் செய்நல னேதுரையாய்
விண்ணியல் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (சா)

பலகோடி தாயிற் பரிவுடை யெந்தையைப் பற்றியென்றும்
விலகாத நின்னன்பர் சங்கம் பராயருண் மேவவெண்ணே
னுலவா முனிவுடை வெங்கால தூதர்க்கென் னேதுவன்சீர்
விலகாத சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (எ)

மாதரு மைந்தரு மற்றுள சுற்றமு மூழ்வழிபிற்
போதரு வாரந்தத் தியாண்டைய ரென்னப் புகலவற்றே

பாதக நீக்குநின் பொன்னடி யேயன்றிப் பற்றொன் றுண்டோ
மேதகு சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (அ)

என்னெஞ்சு மேயெனக் கொல்லா வகித மிழைக்குமெனிற்
பின்னம்பி யான்வரு மேடணை மூன்றிற் பிணிப்புண்டந்தோ
வின்னந் துயர்செய் கொடும்பவக் கோட்பட் டிளைத்தறகா
வின்னின்ற சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கூ)

மாயாத நெஞ்சு மடங்காத வாசையும் வல்வினையா
லோயாத சென்மமு முற்றுழல் வேற்கு முறுதியுண்டோ
தாயாகித் தந்தை குருவாகி நல்குந் தலைவபுகழ்
வீயாத சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (க0)

பாதகம் பற்பல வுற்றுள ரேனும்வெம் பாவையர்க
டோதகத் தாடு சுழன்றன ரேனுமெய்த் தோன்றனின்பா
லாதரம் வைத்துள ரேலவர் வானுல காளறிண்ண
மேதகு சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கக)

ஆன துரும்பு மசையாநின் ஞணையை யன்றியெனத்
தானறை யாநிற்கு மெய்ஞ்ஞா னுலகந் தளர்வதெண்ணில்
யானென தென்னு முனைப்பே யஃதென் றடங்குமெந்தாய்
மேனிகழ் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கஉ)

பொன்னேக்கு மாதர் புலைநோக்கி னெஞ்சம் புழுங்கியந்தோ
நின்னேக்க மின்றி நிலைதளர் வேற்கு நிமலவரு
ணன்னேக் களித்திடு நாளுமுண் டோகளிர் சோலையரி
மின்னேக்கு சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கங)

புலனைந்து மென்னை யலைப்ப நிலையின்றிப் புன்னெறிக
ணலனென் றலமரு வேனெந்தை யாரரு ணண்ணலனே
விலனிக் குரம்பையி னூற்பய னின்கருத் தெங்ஙனிந்து
மிலகின்ற சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கச)

விடையாதி யைந்தி லதுவது வாகி விராயலமந்
துடையா யொருகண மேனுமென் னெஞ்ச முறுதிபெறு
படையாருங் கூற்ற னுறுங்கடை நாட்டுயர் பாற்றவற்றோ
மிடையாணர்ச் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கரு)

கண்டே யனைய மொழியார்கண் மோகக் கலவிநறை
யுண்டே யுணர்விலி யாய்ச்கிடப் பேனுக்கு முன்னருளாந்
தண்டே னுகருந் தவமுள தோதண் டலையெழுந்து
விண்டோயுஞ் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கசு)

எத்தேவர் செய்யுங் கருமமு மெந்தையை யெண்ணியருட்
சித்தேகை கூடுவ வென்றானின் வான்புகழ் செப்பவற்றோ
முத்தே வருக்கு முதற்றேவ னேயன்பர் முன்னுமுத்தி
வித்தேநற் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கஎ)

எள்ளத் தனையு மிரங்காதென் பேதை யிவனென்றெனைத்
தள்ளத் தகாவக் குணமே யியற்கைநின் றண்ணளியாம்
வெள்ளத்தின் வேதிக்கி னன்றிமெய்ஞ் ஞான விளக்கமுறு
விள்ளற்கென் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கஅ)

தாயென் றுனையடைந் தேன்பற்றி லாது தளருமொரு
சேயென்று கொள்ளத் திருவுள மோதிறம் பாவகந்தைப்

பேயென்று தள்ளத் திருவுள மோபெற்றி யொன்றறியேன்
மீயொன்று சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (கக)

பேயாகி னும்பெற்ற தாயான் முனியப் பெருவடிக
டாயா வகிலமுஞ் சந்ததி யாதற்குச் சான்றுமுன்னா
னீயா தரித்திடி னல்லாது வேறு நிலைமையுண்டோ
மீயாருஞ் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உ0)

முப்பத்து மூன்றெனுங் கோடிவிண் ணோரு முடிவணங்கச்
செப்பத் துவிதிகள் சிந்தையென் சேவகத் தேயமர்ந்த
வொப்பற்ற ஞானக் கடாக்களி றேயுனை யென்றடைவேன்
மெய்ப்புற்ற சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உக)

உருகா மனமு முணரா வறிவு முவந்துபுனல்
பெருகாத கண்ணுநிற் பேசாத நாவும்புன் பேதையர்பா
லருகாத மோகமு மெற்கே பணித்த லருட்கழகோ
விரிகோல சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உஉ)

பெற்று ரறிகுவர் பிள்ளை யருமை யெனப்பெருநூல்
கற்று ருலக வுரையுண்மை கண்டனன் கைவலியம் [வான்
பற்று வெனக்குந்தன் றொண்டர்குற் றேவல் பணித்தலின்
விற்றுவு சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உங)

தம்மி லிரண்டறக் கண்டா தரிக்குந் தவத்தர்க்கன்றி
யெம்முடம் பெஞ்செய லென்றிரு மாக்கு மெமக்குமெந்தை
செம்மைகொண் ஞானத் திருநோக் களிக்குஞ் செயலுமுண்
வெம்மையில் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. [டோ

பேறுநின் னாருட் டெள்ளமு துண்டு பிறந்தைதரு
மாறு விருவினைப் புன்பிணி நீங்கி மனோலயமுற்
றூறு மகன்ற பரவெளி யூடுபுக் காரலென்றோ
வீறுருஞ் சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உரு)

பண்ணூட்டு மின்சொற் படிறுடைப் பாவையர் பார்வையினு
புண்ணூட்டு நெஞ்ச னிவனெனத் தள்ளல் புகழன்றுநின் [ற்
கண்ணூட்டி யென்னெஞ்சு நன்னெஞ்ச தாகக் கருதுபுகழ்
விண்ணூட்டு சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உசு)

நானு ரெனைத்தன் மயமாக்கி மாயை நலிவதென்னீ
தானு யெனைக்கண் டகந்தெளிந் துய்யுந் தவமென்றுறாஉ
மானுப் பிறவிக் கடற்கரை யேறு மவதியென்று
மேனாத சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உஎ)

ஆண்டா னடிகண்மற் றெக்கானு மேழை யடிமையென்றே
காண்டாவில் சென்மங் கழிக்கவந் தேனின் கருத்தறியேன்
மாண்டா ரகப்பொரு ளேயருளே யிருள் வாட்டுசுடர்
வேண்டாத சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உஅ)

கற்பேறு சிந்தையு நீரேறு கண்ணுங் கரைந்துகரைந் [வி
தற்பேறு நெஞ்சமும் வாய்க்குங்கொ லோவெனக் காடன்ம
பொற்பேறு மோரிரண் டாயிரங் கோட்டுப் புழைக்கைமத
வெற்பேறு சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (உகூ)

பூவேயப் பூவி னறுமண மேயப் புதுமதுவே
கோவே யிருநிதி யேமணி யேபைங் கொழுங்கற்பகக்
காவேயக் காவிற் கனியே கனியிற் கனிரசமே
மேவோகை சிங்கைப் பதியனு கூல விநாயகனே. (௩0)

அனுகூல விநாயகர்மாலை முற்றிற்று.

சிவமயம்.

# அநுகூலவிநாயகர் பதிகம்.



## காப்பு.

அய்ய னநு கூலத், றய்ய னருளாலே
நொய்ய சொலு மிக்க, செய்ய சொல தாமே.

## நூல்.

திருமிக் குறுசெல் வமுமா யுளுநீள் செஞ்சொற் றமிழாய் தருகேள் வியுமிக், குருமிக் கவர்மன் றலுமைந் தர்களு முற்றிம் பரிவிற் திரளு மெனவே, தருமிக் குறுநற் கொடையும் புகழுஞ் சார்வார் மறுமைக் கதியோ டடிக, ளருள்பெற் றவர்சிங் கைநகர்க் கரசே யநுகூ லவிநா யகமா மணியே. ()

மின்னே நிகர்சிற் றிடைமங் கையர்பால் மிக்கா தரமுற் றடியேன் மருளாக், கொன்னே யமதூ தர்கடுத் திடுநாட் குலையும் படியென் னைவிதித் தனையே, பொன்னே முழுமா மணியே யருளே பொருளே நிறைபூ ரணகா ரணனே, யன்னே யெழிற்சிங் கைநகர்க் கரசே யநுகூ லவிநா யகமா மணியே. (௨)

வேதங் களரற் றியுமாய் கிலவான் மெய்யே யுன்விரிந் திடுசேர்த் தியெலாம், போதஞ் சிறிதின் றியுழன் றிடுநான் புகழத் துணிவுற் றதுபே தமையே, யேதம் மெனவெள்

*

ளலர்நன் முதியோ ரிசையே பெறுபுன் குழவிச் சொலையு, மாதங் கமில்சிங் கைநகர்க் கரசே யனுகூ லவிநா யகமா மணியே. (௩)

நற்ரு யுமெனத் தனுமா ருயிரு நல்லா றுதெரித் திடுதே சிகனுங், கற்ருர் கடிளைத் திடுமா ரமுதே கண்ணே யுனையல் லதுகாண் கிலனுற், சற்றே யருடாங் திடிலுய்ந் திடுவேன் ரு ரா யெனினீ ணிரயம் புகுவே, னற்ருர் தொழுசிங் கைநகர்க் கரசே யனுகூ லவிநா யகமா மணியே. (௪)

எந்தம் முயிருக் குயிரா னவுனை யெண்ணு மலெடுத் தபவங் கடொறுங், கந்தம் மலர்மே லுறைநா லிருகட் கட வுட் குநெடுங் தொழிறந் தனமா, லெந்தம் வினையென் றறு மென் றடியே மெக்கா லமுனைப் பெறும்வாழ் வடைவே, மந்தம் மலிசிங் கைநகர்க் கரசே யனுகூ லவிநா யகமா மணியே. (௫)

பொய்யா னவுடற் பொறையோம் பிநிதம் பூவா தியமுப் பொருளா சைகொடே, மெய்யா முனருட் குருகா தெளி யேன் வீணு கவாணு ளையொழித் தனனு, னெய்யோ னிவ னென் றெனையாள் கலையே ேவே னெருதிக் குமெனக் கிலையா, லையா வுயர்சிங் கைநகர்க் கரசே யனுகூ லவிநா யக மா மணியே. (௬)

கொத்தார் குழன்மங் கையரா சையிலே குப்புற் றுணர் வின் றியலேங் தெளியே, னித்தா ரணிமங் கைதலைப் பொறை யா வெண்ணற் றவுடற் பொறைதாங் கினனுற், சத்தாய்ச்

சதசத் துகள்முற் றுநிறை தாயே யருடன் துதழைக் கவரு, மத்தா வுயர்சிங் கைநகர்க் கரசே யனுகூ லவிநா யகமா மணியே. (எ)

வண்ணக் குறுமா முனிகுண் டிகையில் வருநீ ரைவ ழூத் துமகக் குரிசி, லெண்ணத் துயர்பூம் புதர்வாட் டமற வேகென் றுவிடுத் துமடுத் துமுனி, நண்ணித் தொழமீட் டுமளித் தருணி னல்லா ரருளென் றுமறந் திலனு, லண் ணற் பொலிசிங் கைநகர்க் கரசே யனுகூ லவிநா யகமா மணியே (அ)

எந்தா யுனைவேண் டுவதொன் றெளியே னேதந் தரு மா சையொழிந் துநெடுஞ், சிந்தா குலமற் றுனநற் றலநற் றீர்த்தங் கண்மெய்யன் பர்திருந் தவைக, ணந்தா தமெய்யன் பொடுமிவ் வுடல நண்ணுந் தனையுந் தொழநல் குதியா, லந்தார் புனைசிங் கைநகர்க் கரசே யனுகூ லவிநா யகமா மணியே. (கூ)

வாழ்வா வதுநின் னடியார் கடமை மாறு துவழுத் திவ ணங் குதலே, தாழ்வா வதுபொய் கொலைகா மம்வருஞ் சம யந்தொழலா தியதட் டழிவே, வீழ்வார் நலநல் லவரொன் னலையார் வீணு கன்னு லையொழிப் பர்களா, லாள்வா யெ ழிற்சிங் கைநகர்க் கரசே யனுகூ லவிநா யகமா மணியே.(க0)

அனுகூலவிநாயகர்பதிகம் முற்றிற்று.

---